# ஸ்ரீ கௌரி ஆயுர்வேத
# - - வைத்ய மந்திரம்

பைக்ராப்ட்ஸ் ரோட்
இராயப்பேட்டை, சென்னை.



TRADE MARK

REGISTERED.

டாக்டர் வி. ஆர். சுந்தரம்
ஆயுர்வேத வைத்தியர்.

2-ம் பதிப்பு. 1922

ஸ்ரீமான் பி. இராகவ முதலியார், புதுப்பாக்கம்,

24—6—19.

ஆயுர்வேத டாக்டர் ஸ்ரீமான் V. R. சுந்தரம் அவர்கட்கு வந்தனமளித்துச் சென்னைப் புதுப்பாக்கம் பைக்ராப்ஸ்ரோட் 11 நெ. இல்லத்திலிருக்கும் ஸ்ரீமான் இராகவ முதலியார் எழுதிக் கொண்டது :—எனக்குச் சென்ற ஏப்ரல்மீ 26-ந் தேதி காலரா கண்டு பல மருந்துகளையும் சாப்பிட்டுக் குணமடையாமல் நான் ஸ்மரணையற்று என் மனைவி மக்கள் வருத்தப்படும்படியான நிலைமையில் இருந்தேன். எனது ஆப்த நண்பர் ஸ்ரீமான் இராம கிருஷ்ண முதலியார் தங்களுடைய கௌரி விஷபேதி ஹர ணியைத் தருவித்து அதனுடன் அடக்கஞ் செய்திருந்த குறிப்பில் கண்டபடி உபயோகிக்க மூன்று தினத்தில் நான் பூரண சௌக் யம் அடைந்தேன். ஆதலால் தங்களுடைய மருந்து என்னைப் பிராணபாயத்தினின்றும் நீக்கியதற்குக் கைம்மாருக ரூபா இருபது என் நண்பர் ஸ்ரீமான் ராமகிருஷ்ண முதலியாரிடம் கொடுத் தனுப்பியுள்ளேன். தயவுடன் அங்கீகரிக்கவும். தவிர இவ் விஷ பேதி காணும் காலங்களில் தங்களுடைய மருந்து பிரதி வீடு தோறும் இருந்தால் அவர்கள் தங்கள் குடும்பத்தாரையும் பிராணபாயமான இந் நோயினின்றும் தப்புவிப்பது திண்ணம். உம்முடைய கௌரி விஷபேதி ஹரணி ஒவ்வொரு வீட்டிலும் இருத்தல் அவசியம்.

---

மு. ரு. வ. குளக்கைதயண செட்டியார்.

60 பஸ்ட் கிராஸ் தெரு, மலாக்கா.

ஐயா, தங்களால் செய்யப்பெற்ற நம்மவர்களுக்கு மிகுந்த நன்மையைக்கொடுக்கும் பானும்ருதம் டப்பி 36 இது கடிதம் கண்டதும் தயவு செய்து வி. பி. போஸ்டு மூலமாக அனுப்பி வைக்குமாறு கேட்டுக்கொள்ளுகிறேன்.

# அடக்கம்

# ஸ்ரீ கௌரி ஆயுர்வேத வைத்ய மந்திரம்

நெ. 363, பைகிராப்ட்ஸ் ரோடு,

இராயப்பேட்டை, சென்னை.

## வேண்டுகோள்.

---

சகோதர சகோதரிகளே!

ஸ்ரீ கௌரி தேவியின் வரப்பிரஸாத சித்த ஔஷதங்களின் சிறப்பை நானே வரைதல் நன்றன்று. ஆயினும் சில உண்மைகளை மட்டும் அறிவிக்கக் கடமைப்பட்டுள்ளேன்.

உலகில் மனிதர் கைக்கொள்ளவேண்டிய தருமங்களுள் முக்கியமானவை ஆத்ம தருமம், உலக தருமம் என்பவை யாகும். இவ்விரண்டையும் நடத்தச் சரீரம் சாதனமாயிருத்தலால் சரீர தருமமே இவைகட்கு அஸ்திவாரமென்பர் பெரியோர்.

இறைவன் இச் சரீர தருமத்தைக் காக்க ஆயுள் வேதமென்னும் அரிய மறையை ஈந்து, அதனை உணர்த்தச் சில உபதேச மூர்த்திகளையுஞ் சிருஷ்டித்தார். அவர்கள் அருளால் ஆயுர்வேதம் வளர்ந்து வர பின்னர், கால கதியால் அது குன்றத் தொடங்கியது. அப்பொழுது எந்தப் பராசக்தியின் கடாட்சத்தால் இவ்வுலக காரியங்கள் நடைபெறுகின்றனவோ, அந்த லோகேச்வரி பல நாமபேதங்களுடன் தோன்றிப்

பலபெரியோர்களுக்கு இவ் வாயுர்வேத தத்துவத்தையும், ஔஷத முறைகளையும் மானுடர் நலத்தைக் கருதி உபதேசிக்கலானார். இதுவே உலக தருமத்தில் ஆயுர்வேதம் நிலைபெற்றிருப்பதன் இரகசியமாகும்.

என் முன்னோர் செய்த தவப்பயனால் அவர்கள் ஸ்ரீகௌரி தேவியின் அனுக்கிரகம் அடைந்த ஒரு சித்த புருஷரால் இவ் வாயுர்வேத தத்துவங்களையும் சித்தௌஷத முறைகளையும் உபதேசிக்கப் பெற்றார்கள். அவர்களிடம் சீடனாகவிருந்து அத் தத்துவங்களைக் கற்றறிந்து கொள்ளும் பாக்கியத்தை நானும் பெற்றேன். அவைகளின் பயனை அநுபவத்தில் அறிந்து உலகத்தாருக்கு ஈந்து வழிபட இச் சித்தௌஷதங்களைத் தயாரித்துள்ளேன்.

இதிற் கண்ட ஔஷதங்களைச் சென்னையிலும் வெளியூர்களிலும் உள்ளோர் பலர் உபயோகித்து, பூரண சௌக்கியத்தை அடைந்து, அதன் பயனாக பல நற்சாட்சிப் பத்திரங்களும் அளித்துள்ளார்.

அன்பர்கள் இக்கௌரி சித்தௌஷதங்களை ஆதரித்து நற்பயனடைந்து இன்புறுவார்களாக.

1. நமது வைத்தியசாலை சென்னை இராயப்பேட்டை போஸ்டைச் சேர்ந்த குமாரபுரம் பைகிராப்ட்ஸ் ரோட் 363-ம் நெ. கிருகத்தில் ஸ்தாபிக்கப்பட்டுள்ளது.

2. நோயாளிகள் நமது வைத்தியசாலைக்கு வந்து மருந்து பெற்றுக் கொள்ளலாம். சென்னை நகரத்திற்குள் நோயாளிகள் இருக்குமிடத்திற்கு வயித்தியரை அழைத்துச் செல்வதாயிருந்தால் ரூ. 1 கட்டணம் செலுத்த வேண்டும்.

3. வெளியூர்களிலிருக்கும் நோயாளிகள் தங்கள் வயது, தேகதத்துவம், விவாகமான விஷயம், சைவ அசைவ ஆகார நிர்ணயம், உத்தியோகம், நோய் கண்ட காலம், (கூடுமானல் அறிந்துள்ள அளவு) நோயின் காரணம், உபாதியின் விவரம், அந்நோய் சம்பந்தமாய் முன்னர் எங்கேனும் மருந்து சாப்பிட்டிருந்தாலாவது, அல்லது ஏதேனும் சிகிச்சை செய்யப்பட்டிருந்தாலாவது அதன் குறிப்புகள், இவைகளைப் பெயர் முழுவிலாசம் இவைகளுடன் எழுதி அனுப்பவேண்டும்.

4. உள்நாடுகளுக்கு வி பி யில் மருந்துகள் அனுப்புவிக்கப்படும். பினங், சிங்கப்பூர், முதலிய விடங்களுக்கு முன் பணமின்றி அனுப்பப்படமாட்டா.

5. கால வேறுபாட்டிற் கிணங்க மருந்துகளின் விலைகள் அவ்வப்போது ஏற்றத் தாழ்வுகள் ஏற்படலாம்.

6. ஒவ்வொரு பிரதான இடத்திலும் சுறு சுறுப்பான ஏஜெண்டுகள் தேவை. தக்க கமிஷன்

கொடுக்கப்படும். மற்ற விவரங்களுக்குக் கடிதமெழு தித் தெரிந்துகொள்ளலாம்.

7. எமது மருந்துகளின் மேல் டிரேட்மார்க் காகிய ஸ்ரீ கௌரி தேவியின் உருவம் இல்லாத ஔஷதம் எமது ஔஷதம் அல்ல. ஏனெனில் சிலர் ஏமது மருந்தின் பெயரை வைத்துப் போலி மருந்து களை விற்று வருகிறார்கள். ஆகையால் எம்மிடம் மருந்து வாங்கும் நண்பர்கள் டிரேட் மார்க்காகிய கௌரி மார்க் இருக்கிறதைக் கவனிக்கவும்.

8. இந்த கேட்லாக்கில் கண்ட எல்லா வகை மருந்துகளும் முன் பணம் அனுப்பியும் வி. பி. போஸ்டு வழியாயும் பெற்றுக்கொள்ளலாம். எட்டணு கிரையத்திற்கு உட்பட்ட ஔஷதங்களுக்கு ஆடர் செய்பவர் முன் பணம் அனுப்பினலன்றி வி. பி. போஸ்டில் மருந்து அனுப்பப் படமாட்டாது. முன்பணம் அனுப்பினல் ரிஜிஸ்டர் செலவும் மணி யாடர் செலவும் சரசப்படும்.

9. பினங்கு, சிங்கப்பூர், மலேயநாடுகளில் உள்ள நண்பர்கள் பணம் அனுப்புவதாயிருந்தால் ரிஜிஸ்டர் செய்யாமல் மணியார்டர் செய்வது உத்தமம். அப்படி செய்வதில் அநேக நன்மைகள் இருக்கின்றன.

10. டாக்டர்களும் வைத்யர்களும் பார்த்துத் தீராதென விடப்பெற்ற சாத்திய குஷ்டம், குன்மம், க்ஷயம், காசம், சுவாசகாசம், பார்சவாய்வு, கண்ட

மாலை கிரந்தி முதலிய கொடிய நோய்களைச் சித்த மகான்கள் கூறிய சாஸ்திர விதிப்படியும் அநுபவ மாயும் முடித்த, தாமிர பஸ்பம், தாளக சுண்ணம் சந்திரோதயம் குருமருந்து முதலிய ஔஷதங்களி ஞல் சொஸ்தப்படுத்தப்படும்.

11. இந்த கேட்லாக்கில் சில இடங்களில் வைத்தியமுறையும் நோய்கள் வாராதிருக்கச் சில வைத்திய பழமொழிகளும் எழுதி யிருக்கின்றேன். அதன்படி செய்து உபயோகிக்க வேண்டுகின்றேன்.

டாக்டர். வி. ஆர். சுந்தரம்,

ஸ்ரீ கௌரி ஆயுர்வேத வைத்திய மந்திரம்.



இரகசியம் வெளியாகிவிட்டது !!

# அகஸ்தியர் ரண வைத்தியம்

---

## இதுகாறும் வெளிவராத அருமையான வைத்ய சாஸ்திரம்

இந்த அருமையான ரண வைத்திய சாஸ்திரம் அகஸ்திய முனிவர் அவர்களால் அருளிச் செய்யப்பட்டது. செய்யுளும் வசனமும் சேர்ந்தது. படிப்போருக்கு நன்கு புலனுகும்படி எளிய நடையில் தெளிய வரையப்பட்டுள்ளது. இதில் வெட்டுக்காயம், குத்துக்காயம், கண்டமாலை, பவுத்திரம், மூலம், கன்னப்புற்று முதலிய புற்றுரோகங்கள், அரையாப்பு முதலிய ஸ்திரீரோகங்கள், ஆருத புண்கள், புரையோடும் இரணங்கள், கரப்பான், சொரி சிரங்கு முதலிய சகலவித ரணங்கள் இவைகளை இப்புஸ்தகத்தில் குறிப்பிட்டுள்ள பிரயோகங்களைக் கொண்டு வைத்யர் உதவியின்றி இதைப் படிப்போரே சிகித்ஸை செய்து கொள்ளலாம். மேற்குறித்த ரணங்களை ஆற்றவல்ல பிளாஸ்திரி, களிம்பு, லிண்டு, லோஷன், பத்துகள் முதலியன இலகுவாய் அனைவரும் செய்துகொள்ளலாம். ஆஸ்பத்திரிகளுக்குச் சென்று இரண்டு மாதகாலத்தில் ஆற்றிக்கொள்ளக் கூடிய இரணங்களை இப்புஸ்தக சிகித்ஸை பிரயோகத்தினுல் 10, 11 தினங்களில் ஆற்றிக் கொள்ளலாகும். எவ்வித ரணங்களையும் கத்தியின்றி சிகித்ஸைசெய்யும் அரிய முறைகள் உண்டு. இப்புஸ்தகம் வைத்திருப்பவர்கள் இரண வைத்தியத்திற்கு வைத்தியசாலைக்குச் செல்ல வேண்டியதில்லை.

விலை அணு **12.**

டாக்டர் வி. ஆர். சுந்தரம்,

ஆயுர்வேத வைத்ய மந்திரம், 363, பைகிராப்ட்ஸ் ரோடு,

இராயப்பேட்டை, சென்னை.

# குழந்தைகளுக்கு அவசியமான ஔஷதங்கள்.

---

## கௌரி கோரோஜனைக் குளிகை.

### குழந்தைகளின் ஜலிப்பு, தொண்டைக்கட்டு, சளி, இருமல், இசிவு, ஜுரம், தோஷம், கணம் முதலியவைகளுக்குச் சிறந்த மாத்திரை.

குழந்தைகள் சுகமாக வளராமல் தடுத்து வரும் பலவித வியாதிகளைக் கண்டிக்க இம்மாத்திரை சிறந்த ஔஷதமாகும். குழந்தைகள் இருக்கும் வீட்டில் இது இருக்கவேண்டியது அத்தியாவசியம். சிறுவர்களுக்கு மழையினாலும், பனியினாலும், திடீரென ஜலிப்பு, சளி, இருமல், தொண்டைக்கட்டு, ஜுரம், ஜன்னி, வாந்தி, மயக்கம், வலிப்பு, தோஷங்கள், தூக்கமின்மை இவைகளுண்டாகலாம். அப்போது இம்மாத்திரை கையிலிருந்தால் குழந்தை நோய்களைப்பற்றிய கவலையே வேண்டியதில்லை. 50 மாத்திரைகள் அடங்கிய புட்டி ரூபா 1.

---

*அம்மைநோய் வராமல் தடுக்க:—ருத்திராக்ஷத்தை முலைப்பால் அல்லது தேனில் இழைத்துச் சாப்பிட அம்மை நோய் வராது. மான் தோல் பலம் 2. இதனைச் சுட்டுச் சாம்பலாக்கி தூள் செய்து 2 அல்லது 3 குண்டுமணி எடை எடுத்து தேனில் குழைத்துச் சாப்பிடவும். இவ்விதம் காலை மாலை மூன்று நாள் சாப்பிட்டுவர அம்மை நோய் வரமாட்டாது. ஒருக்கால் வந்தாலும் அதிகமாய் வராது.*

## கௌரி பால கஸ்தூரி மாத்திரை

**குழந்தைகளுக்குண்டாகும் பலவித ஜுரங்கள், ஜன்னி, வலிப்பு, இளைப்பு, தெற்கத்திக்கணை முதலியவற்றிற்கு மருந்து.**

குழந்தைகளுக்குச் சொற்ப சீதளம் கண்டாலும் அதிலிருந்து திடீரென ஜுரம், ஜன்னி தெற்கத்திக்கணை முதலிய பல கொடிய நோய்கள் உண்டாகிவிடலாம். அங்ஙனம் பலவித துன்பங்கள் ஏற்படுங் காலத்து நமது கஸ்தூரி மாத்திரையைக் கொடுத்தால் அது ஆச்சரியப்படத் தக்கவாறு நோய்களைக் கண்டித்துக் குழந்தைக்குச் சுகத்தையும் பெற்றோர்களுக்கு ஆனந்தத்தையும் கொடுக்கும். 50 மாத்திரை விலை ரூபா 1.

---

## கௌரி பால விரேசனி

**குழந்தைகளுக்குண்டாகும் மலச்சிக்கல், பால்கட்டு, வயிற்றுக் கட்டு, கிருமிகள் முதலியவைகளுக்கு மருந்து.**

குழந்தைகளுக்கு மலச்சிக்கல் ஏற்படும்போது வயிற்றில் கட்டும், வயிற்றுவலியு முண்டாகிவிடும். கிருமிகள் வயிற்றில் உண்டாகில், உடம்பில் நமைச்சலும், மயக்கமும், வாந்தியும், இன்ன வியாதி என்று கண்டுபிடிக்கமுடியாத பல கஷ்டங்களும் உண்டாகும். அங்ஙனம் நேரிடும்போது இம்மாத்திரையைக் கொடுத்தால் குழந்தைகளுக்கு நேரிட்ட ஷ நோய்களைக் கண்டித்து நல்ல சுகபேதியை யுண்டாக்கும். 50 மாத்திரை விலை அணா 8.

---

*தலைநோய்க்கு, ஜலதோஷத்திற்கு:—எருக்கம்பாலை விரட்டியில் நனைத்துக் காயவைத்து கொளுத்திச் சாம்பலை டப்பியில் அடைத்துக்கொண்டு ஒரு சிட்டிகை எடுத்து பொடி போடுவதுபோல் உபயோகிக்க 10, 15 தும்மல் வரும். ஜலதோஷத்தால் ஏற்பட்ட தலைநோய் நீங்கும்.*

# கௌரி பால ஸஞ்சீவி தைலம்

## குழந்தைகளுக்குண்டாகும் வயிற்றுக் கட்டிகளுக்கு எண்ணெய்.

குழந்தைகளுக்கு வயிற்றில் கட்டி விழுவது இக்காலத்தில் ஸகஜமாய் விட்டது. ஜ்வரத்தினுல் வயிற்றில் கட்டி யுண்டாகலாம். குழந்தைகளுக்குக் கொடுக்கும் பால், அல்லது மற்ற ஆகாரங்கள் சரியாயில்லாமற் போனுலும், குழந்தைகள் மண், சாம்பல் முதலியவைகளைத் தின்பதினுலும் வயிற்றில் கட்டி விழுவதுண்டு. கட்டி குழந்தைகள் வயிற்றில் உற்பத்தியானதும் அவற்றின் தேகம் இளைக்க ஆரம்பிக்கும். கட்டி முற்றிப்போய் விட்டால் குழந்தைகளுக்குப் பிராண ஆபத்துண்டாகும். கட்டி கண்டவுடன் காலத்தில் இம்மருந்தைக்கொடுத்து கட்டியைக் கரைத்து விடவேண்டும். 3 ஔன்ஸ் எண்ணெய் விலை ரூபா 1.

---

# கௌரி பாலகவாட கிருதம்

## குழந்தைகள் கண ரோகத்திற்குச் சிறந்த நெய்

குழந்தைகளுக்கு ஜ்வரம், இருமல், பேதி முதலிய நோய்கள் வருங்காலத்தில் அவற்றினின்றும் குடலைத் தாங்கி நிற்கும் ஜவ்வுப் பிரதேசங்கள் வீங்கிப்போகும்; ஆகாரம் செல்லாது; உடம்பு இளைக்கும். இத்தகைய ரோகத்திற்குக் கவண என்று பெயர். இது மாந்தகணம், ஊதுகணம், குழிகணம், ஆமகணம், முக்கு கணம், மூலகணம். கணச்சூடு, சூலிகணம் எனப் பல திறப்படும். இவைகளைக் கண்டிக்க இந்த கிருதம் மிக்க உயர்ந்த மருந்தாகும். 4 ஔன்ஸ் கிருதம்|விலை ரூபா 1.

---

*முகப்பருவுக்கு :—புனுகைப் பருவின்மேல் பூசிவர கரைந்துவிடும். சங்கு அல்லது நாமக்கட்டியை இழைத்துப் பூசிவரக் கரைந்துவிடும்.*

## கௌரி பாலரஸார்ணவம்

### பலவித மாந்தங்களுக்குச் சிறந்த எண்ணெய்

குழந்தைகளுக்கு அஜீரணத்தினாலும், கணத்தினாலும் பிற தோஷங்களினாலும் மாந்தம் வருவதுண்டு. அம்மாந்தம் சேரியா மாந்தம்; பீர் மாந்தம், ஜுரமாந்தம், விஷமாந்தம், குழி மாந்தம், கண மாந்தம், சொருகுமாந்தம், ஊதுமாந்தம், நீர் மாந்தம், சிங்கி மாந்தம், வலி மாந்தம், அள்ளு மாந்தம் எனப் பலதிறப் படும். மாந்தத்துடன் இசிவு காண்பதுமுண்டு. இசிவு காணும் போது கௌரி மிருத்யுஞ்சயத் தைலத்தை மேலே தடவி, உள்ளே இம்மாந்த எண்ணெயைக் கொடுக்கவும். முன் ஜாக்கிரதை யாக இந்நோய்க்குச் சிகிச்சை அவசியம் உடனே செய்ய வேண்டும்.

4 ஔன்ஸ் எண்ணெய் ரூபா 1.

1 ஔன்ஸ் கௌரி மிருத்யுஞ்சயத் தைலம் ரூபா 1.

---

## கௌரி பாலாநந்த சஞ்சீவி

### குழந்தைகளின் அஜீரணபேதி, கழிச்சல் முதலியவைகளுக்கு லேகியம்

இது குழந்தைகளுக்கு உண்டாகும் வயிற்றுவளைச்சல், வயிற்று வலி, அஜீரணபேதி, மப்பு முதலியவைகளைப் போக்கி வயிற்றி லுள்ள சகலவித தோஷங்களையும் நீக்கச் சிறந்த மருந்தாகும். நித்ரா பங்கத்தை இது கண்டிக்கும்.

10 நாள் லேகியம் விலை அணா 8.

---

*காதில் சீழ் வடிதலுக்கு:—நல்லெண்ணெய் பலம் 1, குப்பைமேனி இலை ரசம் பலம் $\frac{1}{2}$, வலம்புரிக்காய் 1, கடல் நுரை பலம் $\frac{1}{4}$, எல்லாம் தூள் செய்து எண்ணெயிற் கலந்து காய்ச்சி வடிகட்டி புட்டியில் வைத்துக்கொண்டு சீழ் வடித லுக்கு 2 துளி விட்டு பஞ்சை அடைக்கவும். இவ்விதம் 2, 3 நாள் செய்துவர சீழ்வடிதல் நின்று ரணம் ஆறும்.*

# கௌரி பாலாம்ருத ஸஞ்சீவி

## குழந்தைகளுக்குச் சாதாரணமாய் உண்டாகும் பலவித நோய்களைக் கண்டிக்கத்தக்க ஔஷதங்கள் ஆறு அடங்கிய அழகிய பெட்டி

சாதாரணமாகக் குழந்தைகளுக்கு உண்டாகும் நோய்களைக் கண்டிக்கக்கூடிய பின்வரும் ஆறுவிதமான மருந்துகள் பிரத்தியேகமான சீசாக்களிற் போட்டு ஒரு பெட்டியில் வைக்கப் பட்டிருக்கின்றன. (1) குழந்தைகளின் ஜலிப்பு, சளிக்கட்டு இவைகளுக்கு உபயோகிக்கும் கௌரி கோரோஜனை (2) ஜுரம் ஜன்னிகள் வந்த காலத்தில் கொடுக்கும் கௌரி கஸ்தூரி (3) ஸ்நானம் செய்வித்தபின் குழந்தைகளுக்கு உரைத்துப் போடும் உரை மாத்திரையாகிய கௌரி பால கற்பம் (4) குழந்தைகளின் வயிற்றில் கட்டுகள் சேராமல் பேதி யாவதற்காகக் கொடுக்கும் கௌரி பால விரேசனி (5) குழந்தைகளுக்குண்டாகும் வயிற்றுப்போக்கை நிறுத்தவல்ல கௌரி குணாங்கம் (6) குழந்தைகளுக்கு மாந்தங்கள் வந்தால் கொடுக்கும் கௌரி பாலபோஷணி. இந்த ஆறு அரிய மாத்திரைகள் இப்பெட்டியில் அடக்கம் செய்யப்பட்டிருக்கின்றன. உபயோகிக்கும் வழிகளைப் பெட்டிக்குள்ளிருக்கும் பிரயோக விதியில் காண்க.

பெட்டி ரூபா 3

---

# கௌரி பால ரட்சண்யகுளிகை

## குழந்தைகளுக்குண்டாகும் சோகை, காமாலை இவைகளுக்கு மருந்து.

பலவிதநோய்களில் அடிபட்ட குழந்தைகளுக்கும், சர்ப்ப சம்பந்தமான உஷ்ணம்ஊறி அதனால் இரத்தங்கெட்டு, சோகை, காமாலை முதலியவை கண்ட குழந்தைகளுக்கும் கொடுக்கக் கூடிய சிறந்த மருந்து இதுவே. 25 மாத்திரை அணா 12.

# கௌரி குமுத ஸஞ்சீவித் தைலம்

## குழந்தைகளுக்குண்டாகும் கிரந்தி, கரப்பான், கடுவன் முதலியவைகளுக்கு எண்ணெய்.

குழந்தை பிறந்த 2 அல்லது 3 மாதங்களுள் செங்கிரந்தி, கருங்கிரந்தி, கரப்பான், கடுவன் முதலிய நோய்களுண்டாகி குழந்தைகளின் அழகைக் கெடுத்துவிடுவதுமன்றி, மல ஜலங்கள் கட்டியும், வயிறு ஊதிப்போயும்விடும். குழந்தை சதா உடம்பை முறுக்கிக்கொண்டு அழுவதும், நாவரண்டு குரல் மெலிந்து முகம் வேறுபாடேற்றும், பால் குடிக்காமல் சோர்ந்துமிருக்கும். வயிற்றில் வலி ஏற்படும். இத்தகைய கொடிய நோயினால் குழந்தைகள் கஷ்டப்படாதவாறு காத்து ஆதரிக்க நமது குமுத ஸஞ்சீவி என்னும் தைலத்திற்கு இணையான ஸஞ்சீவி வேறொன்றுமில்லை. 4 ஔன்ஸ் புட்டி ரூபா 1

---

# கௌரி அமுதாதிக் குளிகை

## குழந்தைகளுக்குண்டாகும் தோஷங்களுக்கு மருந்து.

குழந்தைகளுக்கு உண்டாகும் குளிதோஷம், முட்டு தோஷம், பட்சி தோஷம், காற்று தோஷம், திரி தோஷம், எட்டுவித மாந்தம், சுரம், நாவரக்ஷி முதலிய பல தோஷங்களைக் கண்டிக்கும் சிறந்த மாத்திரை.

50 மாத்திரை அடங்கிய டப்பி அணா 12

---

*கண் கட்டிக்கு மருந்து:*—கண்ணின் இமைமேல் சிறு கட்டி ஏற்பட்டு உபத்திரவம் உண்டானால் நாமக்கட்டியை ஜலத்தில் இழைத்துப் பூசி வரவும் கட்டி உடைந்துவிடும் அல்லது அமுங்கிவிடும், அல்லது சங்கை ஜலத்தில் இழைத்து கட்டியின்மேல் பூசலாம். இவ்விதம் இரண்டு மூன்று தினம் செய்தால் குணமாகும்.

# பெரியவர்களுக்கு உபயோகிக்கும் சிறந்த ஔஷதங்கள்

## கௌரி தந்த ரட்சணி

### பற்போடி.

இந்தப் பற்போடியைக் கொண்டு தினந்தோறும் பல் துலக்கி வந்தால், பல், ஈர், நாக்கு இவைகளிலுள்ள சகல நோய்களையும் கண்டித்து வாய் நாற்றத்தைப் போக்கி பற்களுக்கு உறுதியையும் முத்தைப்போல் ஒளியையும் தரும்.

டப்பி 1-க்கு அணா 3

## கௌரி கஸ்தூரி மனோகரம்

### தாம்பூல மாத்திரை.

இந்த மாத்திரையைத் தாம்பூலத்துடன் உட்கொண்டு வந்தால் தாகம், நாவரட்சி, நெஞ்சில் கோழைகட்டு இவைகளைப் போக்கி வாய்க்கு சுவாஸனையைத் தந்து, தேகத்தில் ஜுரம் முதலிய நோய்கள் வராமல் காத்து நல்லஜீரணத்தைக் கொடுத்து ரட்சிக்கும். 200 மாத்திரைகளடங்கிய டப்பி ரூபா 1

---

*கண் நோய்க்கு, கண் சிவப்பு மாற:—சோற்றுக் கற்றாளைச் சாதம் எடுத்துக் கசக்கிப் பிழிந்த ஜலம் பலம் 1படிக்காரம் பலம் ⅛, படிக்காரத்தை நன்றாய்ப் பொடித்து கற்றாளை நீரில் கலந்து கரைத்து வடி கட்டி புட்டியில் அடைத்துக்கொண்டு கண்ணில் இரண்டொரு துளி விட்டுவர் கண் சிவப்பு, கண் குத்தல், வலி, அருகல் முதலிய கண்நோய் தீரும்.*

## கௌரி தத்ருநாசனி

### சொரி, சிரங்குகளுக்கு தைலம்.

சரீரத்தில் ஒட்டு வியாதியாலும், கிருமியாலும் உண்டாகும் சர்ம ரோகங்களாகிய சொரி, சிரங்கு இவைகளுக்கு மேலே தடவும் தைலம். 1 ஔன்ஸ் புட்டி 1-க்கு அணா 8.

---

## கௌரி கிருமி கண்டனி.

### நாக்குப்பூச்சி குடர்பூச்சி இவைகளுக்கு மருந்து.

குடலில் உண்டாகும் கிருமிகள், நாக்குப்பூச்சி இவைகளை இம்மாத்திரையானது கொன்று, அப்பூச்சிகளால் உண்டாகும் வயிற்றளைச்சல், வாந்தி, குமட்டல், வாய்நாற்றம் வயிற்றுக் கடுப்பு, தலை நோய், மூச்சடைப்பு இவைகளைக் கண்டிக்கும்.

1 டஜன் மாத்திரை அணா 8.

---

## கௌரி சர்மரட்சணி

### படைத்தாமரை, கரப்பான், வேர்க்குரு முதலியவைகளுக்கு மெழுகு.

சர்மத்தைப்பற்றி வரும் தோல் வீக்கம், பாலுண்ணி, வேர்குரு, படர்த்தாமரை, எச்சிற்றழும்பு, கரப்பான் முதலிய ரோகங்களுக்கு மேலே பூசும் மெழுகு. ஒரு டப்பி அணா 8.

---

*வயிற்றுவலி, அஜீர்ணபேதி:--சுக்கை மேல்தோல் சீவி உப்பை ஜலம்விட்டு குழைத்து சுக்கின்மேல் தடவி கொஞ்சம் காயவைத்து நெருப்பில் சுட்டு பொடியாக்கி கொஞ்சம் எடுத்து வாயிலிட்டுக்கொண்டு கொஞ்சம் வெந்நீர் சாப்பிட இவைகள் நிற்கும்.*

## கௌரி சாம்பிராணித் தைலம்

ஜலிப்பு, நீர்க்கோவை, சளி, நீர்ப்பீனசம் முதலியவை களுக்கு மருந்து.

ஜலிப்பு கண்டு அதனால் நெற்றியில் வரட்சி, மூக்கிலும் கண்ணிலும் ஜலம் வடிதல், நெஞ்சுவலி, தாகம், குரல் கம்மல், கை, கால், முதுகு இவ்விடங்களில் வலி, ஜுரவேகம் முதலிய வைகள் காணும்போது இத்தைலத்தைத பிரயோக விதியில் கண்டபடி உபயோகிக்கலாம். $\frac{1}{4}$ அவுன்ஸ் தைலம் அணா 8.

## கௌரி கர்ண ரோக நிவாரணி

காதுக்குத்தல் போன்ற வியாதிகளுக்கு மருந்து.

கர்ண சூலை ரோகம், காதுவலி, காதுவீக்கம், காதில் சீழ் வடிதல், நமைச்சல், காது இறைச்சல், காதில் எழுச்சி, புழு உற்பத்தி, செவிடு, காதில் துர் நாற்றம் இவைகள் இந்த திரவத்தி னால் நீங்கிப் போகும். 1 ஔன்ஸ் புட்டி அணா 8.

## கௌரி நேத்ராஞ்சனம்

கண்ரோகங்களுக்கு உபயோகிக்கும் மருந்து.

இது நேத்திர வாய்வு, கண்ணீர் வரட்சி, கண்ணீர் பெருக் கம், கண்ணில் நோய், கண்ணில் பூ விழுதல், கண் லிங்க காசம், மாவலக்கண், இராக்குருடு முதலியவைகளை நீக்கும். புட்டி ரூபா 1.

---

*வெய்யில் கட்டி அல்லது கோடைக்கட்டி:— வேப்பமரத்தின் வேர்க்கட்டையை சந்தனக்கல்லில் இழை த்து ஷை கட்டியின்மேல் பூசிவரக் கட்டி உடையும் அல்லது கரைந்துவிடும் ரணங்களும் ஆறும்.*

## கௌரி சுகாநந்தனி

### கபால ரோகங்களுக்குத் தைலம்.

இந்தச் சுகந்த பரிமளத் தைலத்தைக் கொண்டு ஸ்நானம் செய்து வருவதால் திரிதோஷ பீனசங்கள், கண், கை கால் இவ் விடங்களிற்காணும் எரிச்சல், நித்ரா பங்கம், மயக்கம், வெட்டை ரோகங்கள், மேக காங்கை, ஞாபகக் குறைவு, கபால நோய் கள், ஜுரத்தால் நேர்ந்த துற்பலம், கொடியதலைநோய் இவை கள் நீங்கும்; கூந்தல் கருத்துவளரும். இத்தைலமானது மூளைக்கு அதிக வேலை கொடுக்கும் வக்கீல்கள், மாணவர்கள், உபாத்தி யாயர்கள் முதலியவர்கட்கு அதிக பயனைத் தரக்கூடியது.

6 ஔன்ஸ் புட்டி ரூபா 1-4-0.

---

## கௌரி வஸந்தா

### வாசனைத் தைலம்.

இந்த சுகந்த பரிமள கேசரஞ்சன தைலத்தைக் கொண்டு தினந்தோறும் தலைமயிரை வாரிக்கொண்டுவந்தால் தலை மயிர் கள் கருத்து அடர்ந்து வளரும். இதன் சுகந்த பரிமளம் சுமார் ஒரு வாரம் தலை மயிரை விட்டு நீங்காது. மயிர் உதிருதல், வெடித்தல், சுண்டு முதலியவைகளை நிவர்த்திசெய்து கூந்தலை வளரச் செய்யும். மூளைக்கு குளிர்ச்சி கொடுக்கும்.

புட்டி ரூபா 1.

---

*சுரத்தில், நாவரக்ஷி, தோஷம் இவைகட்கு மருந்து:- நன்முத்து, நற்பவளம், ருத்திராக்ஷம், அக்ராகாரம், மான் கொம்பு இவைகளை சந்தனக்கல்லில் சந்தனம் இழைப்பது போல் கொஞ்சம் கொஞ்சம் இழைத்து ஒன்று சேர்த்து நாக்கில் அரைமணி நேரத்திற்கு ஒருதடவை வீதம் தடவி வர ஷ்டி தோஷங்கள் நீங்கும்.*

## கௌரி மலபந்த நிவாரணி

**மலச்சிக்கலுக்குச் சிறந்த மருந்து.**

மலபந்த முடையவர்கள் இரவில் உணவு உண்டு படுக்கைக்குச் செல்லுமுன் இதை உபயோகித்து வர, காலையில் சுகமான மலப் பிரவர்த்தியைக் கொடுத்து, உஷ்ணத்தைத்தணித்து, மலச் சிக்கலை நீக்கி, நோயணுகாதவாறு தேகத்தைக் காத்து ரட்சிக்கும். எனிமா தேவையில்லை. எனிமா வைத்துக்கொள்ளும் பழக்கமுள்ளவர்கள் அதை நீக்கி இம்மருந்தை உபயோகிக்கலாம். 20 நாள் லேகியம் டப்பி ரூபா 1.

---

## கௌரி தீபாக்கினி சூர்ணம்

**அன்னத் துவேஷம் அக்னிமாந்த ரோகம் இவைகளுக்கு நல்ல மருந்து.**

உட்கொள்ளும் ஆகாரத்தை ஜீரணம்செய்விக்கும் ஜடராக்கினிகெட்டுப்போய் மந்தம் ஏற்படுங்காலத்தில், பசியின்மை, ஈரலில் வலி, உடம்பில் வாய்வுத் திமிர்ப்பு, வயிற்றுப்பிசம், வாயில் பித்த நீர் ஊரல், வாந்தி முதலியன உண்டாகும். இந்தச் சூர்ணத்தை உட்கொண்டால் இத்தகைய துன்பங்களைக் கண்டித்து மந்தத்தைப் போக்கி ஜீரணக் கருவிகளுக்கு உரத்தைக் கொடுக்கும்; அன்னத் துவேஷத்தைக் கண்டிக்கும்.

டப்பி 1-க்கு அணா 12.

---

*சீதபேதி :—படிகாரத்தை தூள்செய்து இரண்டு சிட்டிகை எடுத்து வெண்ணெயில் குழைத்து சாப்பிட்டுவர ரத்தபேதி, சீதபேதி நிற்கும்.*

*சிறுநாகப்பூ, கடுக்காய்ப்பூ இரண்டையும் சம எடை எடுத்து தூள் செய்து இரண்டு சிட்டிகை எடுத்து வெண்ணெயில் கலந்து சாப்பிட சீதபேதி நிற்கும்.*

## கௌரி ஆரோக்ய ஸஞ்சீவி

### நல்ல சுகபேதி மாத்திரை.

ஒரு மாத்திரையை வாயில் போட்டுக் கொண்டு கொஞ்சம் ஜலம் சாப்பிட்டுவிட்டால் சுகபேதி யாகும். ஆயாசம், களைப்பு, உண்டாகாது. வாயில் நீர் ஊரல், வாந்தி, நெஞ்சு சரகரப்பு, உஷ்ணம் இவைகளை நன்றாய்க் கண்டிக்கும்.

40 மாத்திரை கொண்ட டப்பி அணா 12.

---

## கௌரி சூடாமணி

### சீதபேதி, வயிற்றுக் கடுப்பு இவைகளுக்கு லேகியம்.

வயிற்றுக் கடுப்புடன் சீதமும் ரத்தமுமாக பேதியாவது, முக்கலின் மேல் மலம் மிக உபத்திரவத்துடன் வெளியாவது, மலம் தீய்ந்து போவது, இவைகளுடன் ஜுரம் வருதல், வயிற்றில் வலி இத்தகைய துன்பங்களை இந்த லேகியம் போக்குவதில் இணையற்றது. டப்பி அணா 12.

---

## கௌரி மூலரோக நிவாரணி

### மூல ரோகத்திற்கு மருந்து.

மூல ஸ்தானத்திலுள்ள ரத்த நரம்பு திரண்டு கிழங்கு முளை போலாகி, உபத்திரவம் செய்யும் ஒன்பது வகை மூலங்களையும் அடியோடு நாசஞ்செய்து சுகப்படுத்தும் மருந்து. இதற்கிணை வேறு கிடையாது. 20 நாள் லேகியம் பஸ்மம் ரூபா 4.

---

*குழந்தைகட்கு ஏற்படும் நாக்குப்பூச்சி வெளிப்பட:- சித்தாமணக்கெண்ணெயும் மாசிப்பத்திரி இலைரசமும் சம எடை கலந்து பேதிக்குக் கொடுக்க நாக்குப்பூச்சி பேதியுடன் வெளிப்படும்.*

## கௌரி வாதமாருதம்

**கீல் வாதம், முடக்குவாதம் இவைகளுக்கு மருந்து.**

இரத்தங் கெட்டுப்போய் கீல்களிலும், கணுக்களிலும் வாத நீர் தங்கி, நோயுடன் வீக்கங்கண்டு துன்புறுத்தும் கீல் வாதங்களுக்கு இந்த லேகியத்தை உள்ளுக்குக் கொடுத்து வாத ஸஞ்சீவித் தைலத்தை வெளியில் பூசித்தேய்க்க குணம் உண்டாகும்.

20 நாள் லேகியம் ரூபா 2.

கௌரி வாதஸஞ்சீவி எண்ணெய் ரூபா 1.

---

## கௌரி இருதய கோச ரட்சணி

**மாரடைப்பு, மார் துடிப்பு இவைகளுக்கு மருந்து.**

இடது மார்பிலுள்ள இருதய ஸ்தானத்தில் வலி, மூச்சுவிட முடியாதபடி திணரல், பிராணன் போய்விடுவது போன்ற பயம் இவைகள் இருதய துர்ப்பலத்தினு லுண்டாவதுண்டு. அத்தகைய நோயுள்ளவர்கள் இம்மருந்தை உட்கொள்வார்களாயின் எளிதில் சுகம் பெறுவார்கள். 20 நாள் மருந்து ரூபா 4.

---

## கௌரி மயன ஸஞ்சீவி

**மேலே பூசும் தைலம்.**

இது பாரிசவாய்வு, கை கால் குடைச்சல்'மர்மஸ்தானத் தளர்ச்சி, வெட்டுக்காயம், பீஜவீக்கம், ஆண்குறி துவளல், கால் வீக்கம், நரித்தலை வாதம் இவைகளைக் கண்டிக்கும். மேலே தடவித் தேய்த்த 10-நிமிஷத்தில் குணம் காணலாம்.

$\frac{1}{4}$ ஔன்ஸ் புட்டி ரூபா 1.

---

*அஜீர்ணம்:—பிரண்டையை நெய்விட்டு வதக்கி புளிசேர்த்து துவயல்செய்து சாப்பாட்டுடன் கலந்து சாப்பிட புளித்தேப்பம், அஜீர்ணம் நீங்கி சௌக்கியமாகும்.*

# கௌரி வாத ராட்சஸ கிருதம்

## பாரிச வாதத்திற்கு மருந்து.

பாரிச வாதத்தினுல் மூளை வியாதி கண்டவர்களுக்கு ஒரு பக்கம் கைகால்விழுந்து போய்விடுவதுண்டு. அவ்வித நோயாளர்களுக்கு இந்த உள்ளிற்குக் கொடுக்கத்தக்க நெய் மிக்க சிலாக்கியமானது. இத்துடன் சேர்த்து இந்த நோய்க்காக கௌரி செந்தூர பூஷணம்' என்ற செந்தூரமும் கௌரிசிந்தாமணி என்ற மெழுகும் சேர்த்துக் கொடுக்கப்படும்.

நெய். மெழுகு, செந்தூரம் இவைகள் ஒரு நாள் மருந்து ரூபா 1

---

# கௌரி கர்ப்பூராரிஷ்டம்

இது வாந்திபேதி, சீதபேதி, அதிசாரபேதி, அஜீரணபேதி இவைகளைக் கண்டிப்பதுமன்றி வயிற்று உப்பிசத்தினுல் ஏற்படும் திக்குமுக்காட்டத்தையும், பிற நோய்களையும் கண்டிக்கும்.

டப்பி 1-க்கு அணு 8.

---

# கௌரி ஸமய ஸஞ்சீவி

## வயிற்று நோய்க்கு மருந்து.

இது தீராத வயிற்று நோய், பித்தக் கிருகிருப்பு, மயக்கம், பித்த வாய்வு, வாந்தி இவைகளைக் கண்டிக்கவல்ல சிறந்த மாத்திரை. 30 மாத்திரை புட்டி அணு 12.

---

*பாம்புக்கடி:—நஞ்சறுப்பான் வேரை ஜலம்விட்டு அரைத்து ஜலத்தில் கலக்கி சாப்பிட வாந்தி ஆகி குணமாகும். இம்மூலிகைக்கு ஒணுன் கொடி என்றும் பெயர்.*

*தலைச்சுருளி வேரை அரைத்து ஜலத்தில் கலக்கி கொடுத்துவர எல்லா வகை விஷங்களும் தீரும்.*

# கௌரி விஷபேதி ஹாரணி

## காலராவிற்கு மருந்து

காலரா வென்னும் கொடிய வாந்திபேதிக்கு இது கைகண்ட மருந்தாகும். மரணத் தருவாயில் கைசோர விட்டவர்கள் பலர் இம்மருந்தினுல் பிழைத்திருக்கின்ருர்கள். செட்டு விலை ரூபா 2.

---

# கௌரி ஜ்வராங்குசம்

## பலவித ஜ்வரங்களுக்கு கைகண்ட மருந்து

ஜ்வரங்கள் பல வகைப்படும். ஒவ்வொரு ஜ்வரத்தின் தன்மைக்குத் தக்கவாறு கொடுக்கக்கூடிய ஜ்வர மருந்துகள்பல நம்மிட மிருக்கின்றன. நம்மிடம் சிகிச்சை செய்து கொள்ள வரும் நோயாளிகளுக்கு மட்டுமே அவரவர்கள் கையைப்பார்த்து ஜ்வரத்திற்குத் தக்க மருந்துகளைக் கொடுத்துவர முடியும். நம்மால் பார்க்க வியலாதவர்களின் ஜ்வரமானது எத்தன்மையதாயிருப்பினும் சரி, எந்த விதமான ஜ்வரத்தையும் கண்டிக்கக் கூடியதாக இந்த மருந்து தயாரிக்கப்பட்டுள்ளது. இதனுல் பல ஜ்வரங்கள் கண்டிக்கப்படு மென்பதிற் சந்தேகமேயில்லை. 2 டஜன் மாத்திரை விலை ரூபா 1.



---

# கௌரி விஷஜ்வர ஸஞ்சீவி

## இன்புளுயன்சாவிற்கு மருந்து

இன்புளுயன்சா என்னும் மாய ஜ்வரம், டபில் நிமோனியா, டைபாயிட் ஜ்வரம் இவைகளை இது கண்டிக்கக் கூடியது. பலர் அனுபவத்தில் இதை உபயோகித்துக் குணம் பெற்றிருகின்ருர்கள். 16 மாத்திரை விலை ரூபா 1.

---

*நகச்சுற்று :—எலுமிச்சம்பழத்தைக் குடைந்து நகச் சுற்றுள்ள விரலில் வைத்துக் கட்டிவர ஆறிவிடும்.*

## கௌரி வஜ்ரபீஜ குளிகை

**அண்ட வாய்வு, விரை வீக்கம் இவைகளுக்கு மருந்து.**

குடல் வாய்வு, பீஜ வாய்வு பீஜ வீக்கம் கால் வீக்கம் இவைகளுக்கு இம்மாத்திரையை அனுபானப்படி உள்ளுக்குக் கொடுத்து பீஜத்தின்மேல் கௌரி மயன ஸஞ்சீவியைத் 10 நாள் அல்லது 20 வேளை. தடவி வரவும்.

20 மாத்திரை விலை ரூபா 2.

---

## கௌரி திரைலோக்ய ரட்சாமணி

**சகலவித ஜன்னிக்கும் சிறந்த மருந்து**

ஜுரம், இரணம் முதலிய பலவித ரோகங்கள் அதிக்ரமித்து அவற்றால் ஜன்னி, தோஷம் கண்டு பிராணபாயம் ஏற்படக் கூடிய நிலையிலிருக்கும் காலத்தில் எத்தகைய ஜன்னியாயிருந்த போதிலும் நமது திரைலோக்ய ரட்சாமணி என்ற மாத்திரையை உரைத்துக் கொடுத்து விடும் பட்சத்தில் ஜன்னி, தோஷங்கள் பறந்துபோம். இசிவுக்கும் இது கொடுக்கலாம்.

டஜன் மாத்திரை ரூபா 1.

---

## கௌரி வாஸாரிஷ்டம்

**இருமலுக்கு மருந்து**

இது இருமல், கோழை, மூச்சடைப்பு, ஆயாசம், கஷ்ட சுவாசம் இவைகளைக் கண்டித்து, ரத்தத்தைக் கெடுத்து வரும் கொடிய கபரோகங்களைக் கண்டிக்கவல்ல சிறந்த ஔஷதமாகும். 20 மாத்திரை ரூபா 1.

---

*சிரங்கு மருந்து:—கெந்தகத்தை தேங்காயெண்ணெயில் அரைத்துக் கலந்து சிரங்கு புண்களுக்குப் பூசிவர ஆறி உலரும்.*

## கௌரி வாதமர்த்தன ஸஞ்சீவி

### சகல வாயுக்களையும் கண்டிக்கும் சிறந்த மருந்து

வாத ரோகங்கள் பலவாயினும் வாயு சம்பந்தமான நோய்கள் யாவற்றையும் பொதுவாகக் கண்டிக்கக்கூடிய சக்தி இம்மருந்திற்குண்டு. இதை உட்கொள்ளும் அனுபானங்களுடன் கூடச் சேர்க்கக்கூடிய பிரத்யேக மருந்துகள் சில உள. அவை விசேஷமாக ஒவ்வொரு வாதத்தையும் எளிதில் கண்டிக்கக் கூடியவைகளாயிருக்கும். நோயின் இலக்கணம் தெரிந்தால் அனுபான மருந்துகளையும் சேர்த்துக் கொடுக்கலாம். வாய்வைக் கண்டிக்க இதற்கு நிகராக வேறொரு மருந்தைக் கூற முடியாது. 4 ஔன்ஸ் எண்ணெய் ரூ. 3.

---

## கௌரி ஜலமஞ்சரி ரஸம்

### மகோதரத்திற்கு மருந்து

வயிறு நாளுக்கு நாள் பெருத்தும் சரீரம் இளைத்தும், கால் கைகளில் அழுத்தினால் பள்ளம் விழும்படி வீங்கியும் மூத்திரத்தில் பித்த நீர் கலந்துமிருக்கும் மகோதரம் என்ற கொடிய ரோகத்திற்கு இது சிறந்த மருந்தாகும். 10 நாள் ஔஷதம் ரூ. 2.

---

## கௌரி சூலை நிவாரணி சூர்ணம்

### சூலை நோய்களைத் தீர்க்கும் மருந்து

சூலை வாயுவினால் ஏற்படும் நரம்புப் பிடிப்பு, பக்கசூலை, வலி, புருவத்தில் நோய், விரையில் வலி, இடுப்பில் வலி, அவயவப்பூட்டுகளில் நோய் முதலிய பல நோய்களையும் இது கண்டிக்கும். 20 நாள் மருந்து விலை ரூ. 3.

---

1. பாலோடாயினும் கால மறிந்துண்.

## கௌரி கூஷ்மாண்ட கிருதம்

### அதிக உஷ்ணத்தால் உடல் வற்றிப் போவதைத் தடுப்பதற்கு மருந்து

மாமிச தாதுவும் இந்திரிய தாதுவும் குறைந்து தேகம் உலர்ந்து நாளுக்குநாள் இளைத்து சக்தியில்லாமல் போய்விடுபவர்களுக்கு இந்த ஔஷதம் மிகச் சிறந்தது. உஷ்ணத்தைத் தணித்து உடம்பைத் தழைத்துப் பெருக்கும்படி செய்யும்.

4 ஔன்ஸ் நெய் விலை ரூ. 2.

---

## கௌரி பிரமேக நிவாரணி

### வெள்ளை, வெட்டை, நீர்க்குத்தல் முதலியவைகளுக்கு மருந்து

ஸ்திரீ சம்போக மேலீட்டினாலும், முறைபிறழ்ந்த செயல்களாலும் வரும் கொடிய ரோகமாகிய நீர்ப்பை இரணம், மேக வெள்ளை, வெட்டை, நீர்க் குத்தல், நீர் அடைப்பு, சீழ் வடிதல் முதலிய நோய்களுக்கு இது கைகண்ட மருந்து.

10 நாள் அல்லது 20 வேளை ஔஷதம் ரூ. 2.

---

## கௌரி குன்ம குடாரம்

### குன்மத்திற்குச் சிறந்த மருந்து

வயிற்று வலி, சூலை எரிவு, அஜீர்ண வாந்தி, எரி குன்மம், சர்த்தி குன்மம், வலி குன்மம், ரத்த குன்மம், கர்ப்பாசய குன்மம் முதலிய ரோகங்களைக் கண்டிப்பதில் இது இணையற்றது. ஐந்து உப்புகளுடன் பல அரிய சரக்குகளும் சேர்த்துத் தயாரிக்கப்பட்டது. 20 நாள் மருந்தும் 5 நாள் எண்ணெயும் ரூ. 7.

---

2. உண்ணும் உணவை மிதமா யுண்ணு.

## கௌரி பிருங்கராஜ கிருதம்

### காமாலை ரோகத்திற்கு மருந்து

பித்தநீர் ரத்தத்தில் சேர்ந்து அதனால் உண்டாகும் காமாலை ரோகம், பித்த பாண்டு, பித்த காமாலை, கும்ப காமாலை, ஊது காமாலை முதலியவைகளை நீக்கத்தக்க சிறந்த நெய். 4 ஔன்ஸ் விலை ரூ. 3.

---

## கௌரி ஸர்வ மேகத்வம்சனி

இது வெண்மேகம், செம்மேகம், கருமேகம், ஆரம்பகுஷ்டம், கிரந்தி, கண்டமாலை, அரையாப்பு, யோனிப்புற்று ஆண் குறிப்புற்று, ஸ்திரீ சம்பந்தமான இதரரோகங்கள், மேகச்சொரி மேக விரணம், மேக ஊறல் முதலியவைகளைக் கண்டிக்கவல்ல சிறந்த எண்ணெய். மேக விரணத்திற்குப் போடும் களிம்பும் இத்துடன் கொடுக்கப்படும். 4 ஔன்ஸ் எண்ணெய் ரூ. 5.
மேக இரணக் களிம்பு டப்பி அணா 12.

---

## கௌரி நாராயண மண்டூரம்

### இது பாண்டு ரோகத்திற்குக் கொடுக்கும் மருந்து

தேகத்திலுள்ள ரத்தத்தின் சிவந்த அணுக்கள் குறைந்து, தேகம் வெளுத்து, சக்தி குன்றி, மிருத்திகா புத்தி என்னும் சாம்பல், மண், செங்கல் இவைகளைத் தின்பதில் ஆசை உண்டாகி, வீணாகப் பிராணனை இழக்கும்படி நேரிடத்தக்க பாண்டு ரோகத்தை இம்மருந்து கண்டித்து, ரத்த விருத்தியை உண்டுபண்ணும். சுவர்ண அயகாந்த செந்தூரத்தையும் இத்துடன் கூடக் கொடுத்து வரவேண்டும். 40 நாள் மண்டூரம் ரூ. 15.

---

3. சுத்த நீரிலே நித்தமும் முழுகு.

# கௌரி காலந்தக ஸஞ்சீவி

## பிளேக் நோய்க்கு மருந்து

பிளேக் என்னும் கொள்ளை நோய்க்கு இது சிறந்தமருந்து ஆரம்பத்திலேயே இதை உள்ளுக்குக் கொடுத்து, களிம்பைக் கட்டியின் மேல் தடவிவர சீக்கிரம் குணம் காணலாம்.

16 மாத்திரையும் களிம்பும் ரூ. 1-8-0.

---

# கௌரி க்ஷய குலாந்தகன்

## க்ஷய ரோகங்களுக்குச் சிறந்த மருந்து

காச க்ஷயம், ரத்த க்ஷயம், பித்த க்ஷயம் முதலிய க்ஷய ரோகங்களைக் கண்டிப்பதிற் சிறந்த மருந்து இதுவேயாகும். இது ரோகத்தை நன்றாய்க் கண்டிப்பதுமன்றி இளைத்துள்ள தேகத்தைப் புஷ்டியாக்கி திடசக்தியை யளிக்கக் கூடியது.

10 நாள் அல்லது 20 வேளை மருந்து ரூ. 10.

---

# கௌரி ஜீவாம்ருத ஸஞ்சீவி

## சிறந்த தாது புஷ்டி லேகியம்

இது பலத்தையும் ஆண் தன்மையையும் அதிபாலியத்திலேயே இழந்து, பலமின்றி தவிப்போரின் ஆயுளையும் மானத்தையும் காத்து ரட்சிக்க நிகரற்ற லேகியம். தாது விருத்தியும், இரத்தக்கட்டும், நரம்பு, சதைகளுக்கு வலிவும், குண்டிக்காய், மார்பு, இருதயம், மூளை இந்த இராஜ கருவிகளுக்குப் பலமும், கொடுப்பதில் இதற்கு இணை எதுவும் கிடையாது. 10 நாள் மருந்து ரூ. 2,

---

## கௌரி காசாரிஷ்டம்

### காசரோகத்திற்கு மருந்து



சுவாசகாசத்திலாவது, இரத்த காசத்திலாவது, பித்த காசத்திலாவது, மந்தாரகாசத்திலாவது துன்பப்பட்டுக் கொண்டிருக்கும் நோயாளிகளின் பிணியை இந்த ஔஷதம் உடனே அகற்றிவிடுவதுமன்றி, சுவாசம் விடுவதிலுள்ள கஷ்டம், கோழைக்கட்டு இவைகளைக்கண்டித்து சுநித்திரையையும் கொடுக்கும்.

20 நாள் லேகியம் ரூ. 15.

---

## கௌரி பைரவ திரவம்

### ஜுரக் கட்டியைக் கரைக்கும் திரவம்

நாட்பட்ட ஜுரத்தினால் வயிற்றில் காணும் அபாயகரமான ஜுரக் கட்டியைக் கரைத்து உயிரைக் காத்து ரட்சிக்க நிகரற்ற ஔஷதம் இதுவேயாகும். மகோதரம், பெருவயிறு இவைகளுக்கும் பிற இதர ரோகங்களுக்கும் இதைக் கொடுக்கலாம்.

அரை ஔன்ஸ் புட்டி ரூ. 2.

---

## கௌரி கஜாங்குசம்

### யானைக்காலுக்கு எண்ணெயும் செந்தூரமும்

இது யானைக்கால், நெறி கட்டி வரும் ஜுரம் முதலிய வாத ரோகங்களுக்குக் கொடுக்கும் இணையற்ற மருந்து.

5 நாள் எண்ணெயும் 10 நாள் செந்தூரமும் விலை ரூ. 7.

---

5. தீய உணவை நோயென விலக்கு.

## கௌரி மலேஜ்ஜுர ஹரி

### மலேரியாவுக்கு மருந்து

இது ஈரலுக்குள் குளிர்ச்சியை உண்டாக்கி, பின் நரம்புகளில் வியாபித்து, தேகத்தை குலுக்கி ஆட்டும் குளிர்சுரம் ஒரு நாள் விட்டு ஒருநாள் வரும் முறைசுரம் முதலிய எவ்வகை முறை சுரத்தையும் ஒரே நாளில் குணப்படுத்தும். அடுத்த தினம் கட்டாயம் சுரம் வரமாட்டாது. அப்படி வந்தால் 16-ல் ஒரு பங்கு தான் வரும். அன்றைய தினமும் மருந்து சாப்பிட எக்காலத்திலும் ஜுரம் வரமாட்டாது. 30 மாத்திரையுள்ள புட்டி ரூ. 1.

---

## கௌரி வஸந்த குஸுமாகரம்

### (டையபிடீஸ்) நீரிழிவுக்கு நல்ல மருந்து

மதுமேக ரோக மென்னப்படும் கொடிய நீரிழிவு ரோகத்தைத் தீர்த்து ஆயுளைக் காத்து ரட்சிக்கும் சிறந்த ஔஷதம் இதுவேயாகும், இது மூத்திர சம்பந்தமாக உற்பத்தியாகும் வியாதிகள் பலவற்றையும் கண்டிக்கக்கூடியது. இதில் நன்முத்து பஸ்பம், நற்பவள பஸ்பம், தங்கபஸ்பம், வெள்ளி பஸ்பம், அயம், காந்தம், அப்பரகசிந்தூரம் ஆகிய இன்னும் பல ஔஷதங்கள் சேர்த்து முடிக்கப் பெற்றுள்ளது. 20 வேளை மருந்து ரூ. 10.

---

## கௌரி விச்வம்பர ரஸம்

### குஷ்ட ரோகத்திற்கு மருந்து

குஷ்டரோகம் தீராத நோய் என்று பலர் கூறுவர். இதில் சாத்ய ரோகங்களும், அசாத்ய ரோகங்களுமுண்டு. குஷ்டத்தில் 18 விதங்களிருக்கின்றன. சாத்யமான குஷ்டரோகங்களை இம்மருந்துடன் உபபலமான இதர மருந்துகளையும் சேர்த்துக் கொடுத்துக் குணப்படுத்தி யிருக்கிறது. அசாத்ய குஷ்டரோகங்களை மருந்து கொடுத்து அதிகம் வளர விடாமல் தடுத்து வரலாம். 20 நாள் மருந்து ரூ. 20.

# கௌரி வரப்பிரசாதம் என்னும் மதனவீரியக் குளிகை

## இந்திரிய விருத்திக்குச் சிறந்த மாத்திரை

இதை அநுபானப்படி உபயோகித்து வர தாது நஷ்டம், பலஹீனம், துரிதஸ்கலிதம், கோசந்துவளல், மறதி, அசதி, இடுப்புவலி, அதிபோகத்தாலும், அல்லது வியாதியினாலும் இழந்து விட்ட ஆண் தன்மை இன்மை, சொப்பன ஸ்கலிதம், ஆண்குறியில் உணர்ச்சி குறைந்து இன்பங் தோற்றாமை, போகத்தில் விருப்பமின்மை, சிறு பிராயத்தில் அறியாமையால் அக்கிரம கிருத்தியங்கள் செய்து அதனால் ஏற்படும் மேகச்சூடு, மேகவெட்டை, இந்திரியம் நீத்துப் போதல், மூளை, இருதயம் இவைகளிலுள்ள சக்திக் குறைவு, முதலிய துர்க்குணங்களைப் போக்கி, மனோ உற்சாகம், ஞாபக சக்தி, வீரிய விருத்தி, பலம், இந்திரியக்கட்டு, சரீர ஆரோக்யம், நல்ல பசி, நரம்புகளுக்கு வலிவு இவைகளைக் கொடுத்து, தாது விருத்தியை உண்டாக்கும். இக்குளிகை குற்றமற்ற சரக்குகளால் செய்யப்பட்டவை. ஆதலின், இது இந்திரியத்தை ஊற்றுப்போலச் சுரக்கும்படி செய்யும். வலிவைக் கொடுக்கும். இது தங்க பஸ்பம், நன்முத்து பஸ்பம், அம்பர் முதலிய உயர்ந்த சரக்குகளுடன், தாதுவை விருத்தி செய்யும் சித்த மூலிகைகளின் சத்துக்களும் சேர்த்து முடிக்கப் பெற்ற சிறந்த ஔஷதம்.

30 மாத்திரை கொண்ட புட்டி ரூ. 3.

---

# கௌரி சுவர்ண அயகாந்த செந்தூரம்

## சிறந்த இரத்த விருத்தி மருந்து

இதை வெண்ணெய் அல்லது நெய்யில் ஒரு குன்றிமணி அளவு சேர்த்து உபயோகித்துவர, பாண்டுரோகங்கள், காசம்,

---

6. நெல்லு மூமியும் நீங்கிய சோறுண்.

கிராணி, பித்தரோகங்கள், நரம்புகளுக்கு மெலினம், இரத்தக் குறைவு, பசி இன்மை முதலிய நோய்களைப் போக்கி, இரத்தம், மாமிசம், எலும்பு, மூளை, விந்து முதலியவைகட்கு உண்டாகும் நோய்களை நிவர்த்தி செய்து, இரத்த சுத்தியையும் தாதுபுஷ்டியையும் அதிக பலத்தையும் கொடுக்கும்.

குறிப்பு:—இம்மருந்து சாப்பிட ஆரம்பிக்குமுன் எடைபோடும் இடத்தில் மருந்து சாப்பிடுபவர் தம்மை நிறுத்துக் கொண்டு, இத்தனை பவுண்டு எடை இருக்கிறேமென்று குறித்துக் கொண்டு, இச்செந்தூரத்தை ஒரு மண்டலம் அல்லது அரை மண்டலம் புசித்துப் பின்னரும் நிறுத்துப் பார்க்க, ஆச்சரியப் படத் தக்கவாறு தேக வளர்ச்சியும் பலமும் உண்டாயிருப்பது தெரியவரும்.

இதனை ஜீவாம்ருத லேகியத்தில் வைத்துண்ண, நல்ல அழகும், பலமும், அபரிமிதமான தாதுவிருத்தியும், நீண்ட ஆயுளும் உண்டாகும். இதனை உபயோகிக்கும் கிழவர்களுக்கும் வாலியர் போன்ற பலம் உண்டாகும். யௌவன காலங்களில் சாப்பிட கிழத்தனம் வரவொட்டாமல் இது தடுக்கும். அயம், காந்தம் முதலியவைகளில் சத்து எடுத்து தங்கம் சேர்த்து இச்செந்தூரம் செய்யப் பெற்றுள்ளது.

இளைத்தவன் இரும்பைத்தின்க என்ற பெரியார் வாக்கிற்கு இது இலக்கான ஔஷதம்.

40 வேளை செந்தூரம் ரூ. 10.

---

## கௌரி வெள்ளி பஸ்பம்

### மேகத்தாலுண்டாகும் ரோகங்களுக்கு மருந்து

இதனைக் கிரமப்படி உண்ண மேகத்தால் உண்டான கைகால் பிடிப்பு, நாபி அழலை, புண், அஸ்திமேகம், எலும்புருக்கி

---

7. மட்டான போஜனம் மனத்திற்கு மகிழ்ச்சி.

தேகம் இளைத்தல், நீரடைப்பு, ரத்தக்ஷயம், காசம், இருமல், சதை யடைப்பு, வெள்ளை வீழ்தல் முதலிய வெட்டை ரோகங் களை வேரறக் களைந்து, நீத்துப்போன இந்திரியத்தைக் கெட்டிப் படுத்தி, சொப்பன ஸ்கலிதம் முதலியவற்றை நிறுத்தி, தாது விருத்தியை உண்டாக்கும். 30 வேளை பஸ்பம் ரூ. 5.

---

## கௌரி ரசிதமாலினி லேகியம்

### உத்தியோகஸ்தர்களுக்கு இது மிக்க அவசியமானது.

இந்த லேகியம், மூளைக்கு அதிக வேலை கொடுக்கும் வக்கீல்கள், மாணவர்கள், உபாத்தியாயர்கள், பத்திராதிபர்கள், சதா வாசிப்பவர்கள் எழுத்து வேலை உடையவர்கள் இவர் கட்கு அதிக பயனைத்தரவல்லது. இதைக் காலை மாலை இருவேளையும் சாப்பிட்டுவர, ஞாபகக்குறைவு, அசதி, சோம்பல், இடுப்புவலி, கைகால் ஓய்ச்சல், துர்ப்பலம், மலச்சிக்கல், மயக்கம், நீர் எரிச்சல், நரம்புத் தளர்ச்சி, பசி இன்மை, அதி உஷ்ணத்தால் 4, 5 தரம் பேதியாதல், கடலைப்பருப்பு, உருளைக்கிழங்கு முதலியவற்றை கொஞ்சம் சாப்பிட்ட போதிலும் பேதி யாதல், நீரில் இந்திரியம் வெளிப்படுதல், சொர்ப்பன ஸ்கலிதம் முதலிய நோய்களை இது நிவர்த்தி செய்யும். மூளை, இருதயம், குண்டிக்காய் முதலிய உறுப்புகளுக்கும் நம்புகளுக்கும் இது வலிவைக் கொடுத்து ஞாபகசக்தியையும், சுறுசுறுப்பையும் உண்டாக்கும் சுகுண லேகியம். 40 வேளை லேகியம் ரூ. 5.

---

## கௌரி நீர்பந்த நிவாரணி

### நீர் சம்பந்தமான சகல ரோகங்களுக்கும் மருந்து

இந்த பஸ்பத்தை நெய்யில் குழைத்துச் சாப்பிட நீர் அடைப்பு, சதை அடைப்பு, கல்லடைப்பு, நீரேரிவு, நீர்க்குத்

---

8. மனக்கவலை பலக்குறைவு.

தல், மேக காங்கை, வெள்ளை வீழ்தல் முதலியனவற்றைக் கண்டிக்கும். 30 வேளை மருந்து ரூ. 2.

---

## கௌரி ஆரோக்ய ஸ்நானப் பொடி

இந்தச் சூரணத்தில் ஒரு தோலா அளவு எடுத்து ஜலம் விட்டுக் குழைத்து உடம்பெங்கும் பூசி ஸ்நானம் செய்து வர, கற்றாழை நாற்றம், சொரி சிரங்கு, நமட்டுச் சிரங்கு, வேர்வைக் குரு, அரிப்பு, மேகப்படை முதலிய தோலைப்பற்றிய ரோகங்கள் அனைத்தையும் இது போக்குவதுடன் தேகத்தில் நல்ல பரிமளமும் அழகும் உண்டாகும். டப்பி 1-க்கு ரூ. 0—8—0

---

## கௌரி தலை நோய் மாத்திரை

ஒருத் தலைநோய், சூரிய உஷ்ணம் அதிகமாக ஆக ஏற்படும் தலை நோய், மலபந்தத்தால் ஏற்படும் தலைநோய், பித்தம் அதிகரித்தலால் ஏற்படும் தலை நோய், முதலிய எவ்வித தலை நோய்க்கும் இரண்டு மாத்திரை சாப்பிட ஐந்து நிமிஷத்தில் அவை நின்றுவிடும். 30 மாத்திரை கொண்ட புட்டி ரூ. 1.

---

# ஸ்திரீகளின் ரோகங்களுக்குச் சிறந்த ஔஷதங்கள்

---

## ஸ்ரீ கௌரி கர்ப்பரக்ஷிணி

### ஸ்திரீகளுக்குச் சிறந்த புத்திரசந்தான எண்ணெய்

வீட்டு விலக்கம் வரும் நாட்களில் இதைக் கிரமப்படி உபயோகிக்க, சூதகவாய்வு, சூதகபந்தம், வீட்டுக்கு விலக்கமான சமயத்தில் ஏற்படும் வயிற்றுவலி, தலைவலி, பிடரிநோவு, சூதக ஜன்னி, மாதவிடாய் கிரமமாய் ஆகாதபடியால் தேகம் ஸ்தூலித்தல், சர்ப்பசூலை, குழந்தையே இல்லாதிருத்தல், ஒரு குழந்தை பிறந்த பின் குழந்தையே இல்லாதிருக்கும் கதலி முதலிய ஆறு வித் மலட்டு ரோகங்கள், 2, 3, 4, 5, 6 மீ வரை கர்ப்பமாயிருந்து வெளிப்பட்டுப் போகும் கர்ப்பச் சிதைவு ரோகங்கள், குழந்தை பிறந்து 2, 3, 4, 5 மீ இருந்து இறந்து போதல், யோனி சூலை முதலிய கர்ப்பரோகங்களைத் தீர்த்து மாதவிடாயைக் கிரமப்படுத்தி, கருப்பத்தைப் போற்றி வளர்ப்பதில் இது சிறந்த புத்திர சந்தான எண்ணெய். 3 நாள் எண்ணெய் ரூ. 3.

---

## கௌரி அசோக கிருதம்

### ஸ்திரீகளின் பெரும்பாடு ரோகத்திற்கு மருந்து

ஸ்திரீகளுக்கு வீட்டு விலக்கம் சரியான நாட்களில் காணுமல் சீக்கிரமாக அடிக்கடிக் காணும் சூதகங்களுக்கும் அதனால், கருப்பையிலிருக்கிற தாதுகள் பல ஹீனமடைந்து இருப்பதற்கும், இம்மருந்து மிக்க சிலாக்கியமானது. இத்துடன் ஜுரமும் காண்

---

பதுண்டு. அக்காலத்தில் ஜுரத்திற்கு மருந்து கொடுத்து அதன் குறிகளைச் சமனம் செய்து கொண்டு இம்மருந்தை கொடுக்க வேண்டும். 30 நாள் நெய் ரூ. 5.

---

## கௌரி சோமசுந்தர ரசம்

### ஸ்திரீகளுக்குண்டாகும் சூதகவாய்வு, சூதக ஜன்னி இவைகளுக்கு மருந்து

ஸ்திரீகளுக்கு சூதகவாய்வு காணும்போது அடிவயிற்றில் வலியும் இரைச்சலுமுண்டாகி பந்துபோலெழும்பி தொண்டையில் அடைத்துக் கொள்வதும், பிரட்டல் காண்பதும், தேகமெங்கும் வலியும் உண்டாகும். சூதக ஜன்னி கண்டவர்களுக்குப் புதிது புதிதான சேஷ்டைகளும் துன்பங்களும் உண்டாகும். பார்த்தவர்கள் பிசாசு பிடித்து விட்டதென்று கூடச் சொல்வார்கள். இத்தகைய கொடிய நோயைக் கண்டிக்க இம்மருந்து மிக்க சிலாக்கியமானது. 10 நாள் மருந்து ரூ. 7.

---

## கௌரி சௌபாக்கிய சூர்ணம்

### சூதகபாண்டு ரோகமுடைய ஸ்திரீகளுக்கு மருந்து

புத்தியறியாத சிறு பெண்களுக்கு ரத்த நரம்புகளும் கர்ப்பாசயமும் கெட்டுப் போவதால் வீட்டு விலக்கமே ஏற்படாமலும் இரத்தத்தால் சிவந்த அணுக்கள் குன்றியும், அளவு குறைந்தும் போய்விடும். கைகால் அசதி யுண்டாகி முகம் வெளுத்துப் போகும். இக்நோயைத் தீர்த்து உடம்பில் ரத்தத்தை விருத்தி செய்து சூதகத்தில் வலி முதலிய தொந்தரவுகளின்றி கிரமமாக விடாய் காணும்படி செய்யத் தக்க மருந்து இதுவே.

10 நாள் மருந்து ரூ. 5.

---

11. 'பிறர் பிணி தீர்த்தல் அறமெனத் தகும்.

# கௌரி பானும்ருதம்.

## காப்பிக்குப் பதிலாக உபயோகிக்கும் ஜீவாதார ஆரோக்ய அம்ருதபானம்

வீணாகக் காப்பியைக் குடித்துத் தேகத்தைக் கெடுத்துக்கொள்ளாதீர்கள் !

*அங்கம் மெலிந்து, ஆயுள் குறைந்து*
*அகால மரணத்திற் காளா காமல்,*
*தங்கம் போன்ற தேகப் பொலிவும்*
*சிங்கம் போன்ற வீரத் தன்மையும்*
*தானே பெறுவர் தக்கோர் அருளிய*
*பானு மிருதம் பருகுவர் தாமே.*

இதன் பெருமையைக் கூறின், உயர்வு நவிற்சி எனத் தோன்றுமாதலின் இதை உபயோகிப்பவர் தாம் கண்ட பயனை எமக்கு அறிவிக்குமாறு விட்டுவிட்டோம்.

30 வேளை உபயோகிக்கும் பௌடர்கள் அடங்கிய டின் அணு 8.

12. *பசித்தபின் புசித்தலே பண்பு.*

## கௌரி அம்ருதகலா

### எல்லாவித வலிகட்கும் திவ்ய அஞ்சனம்

இதனில் சிறிதளவு எடுத்து வலியுள்ள இடத்தில் தேய்க்க ஐந்துநிமிஷத்தில் வலி நிற்கும். குழந்தைகட்கு மாந்தவலி என்று சொல்லப்படும் இழுப்பு நோய்க்கு இதனை மேலுக்கு உபயோகிக்க உடனே குணம் ஏற்படும். முழங்கால் நோய், இடுப்பு வலி, கைகால் குடைச்சல், தலைவலி, சுளுக்குநோய், கீல்நோய் ஜலதோஷம், பக்கவலி, பார்சவாயுவினால் கைகால் விழுந்து போதல் முதலிய நோய்கட்கு உபயோகிக்க ஆச்சரியப்படும் மாதிரி உடனே குணத்தைக் காண்பிக்கும், இது ஒவ்வொருவர் வீட்டிலும் அவசியம் இருக்கவேண்டியது.

புட்டி 1-க்கு அண 12.

---

## கௌரி சர்வமேக த்வம்ஸ லேகியம்

### இஞ்செக்ஸன் வேண்டிய அவசியமில்லை

இந்த லேகியத்தில் சுண்டைக்காய் அளவு எடுத்துக் காலை மாலை உபயோகித்துவர கீழ்க்கண்ட நோய்கள் தீரும் எவ்வித பத்தியமுமில்லை. வியாதியின் நிலைமைக்குத் தக்கவாறு 10 நாள் 20 நாள் 40 நாள் சாப்பிடவேண்டும். மேக எண்ணெ சாப்பிட முடியாதவர்க்கு இது அதி சிலாக்கியமானது.

### இதனால் தீரும் நோய்கள்

ஸ்திரீகள் சம்பந்தமான நுணுக்கிரந்தி, கள்ளிப்பூக்கிரந்தி, மேக ஊறல், மேகத்தடிப்பு, மேகப்படை, கைகால் பிடிப்பு, பரங்கிப்புண், அரிப்பு, லிங்கப்புற்று, யோனிப்புற்று முதலிய புற்று ரோகங்கள் நாசியை அரிக்கும் நாக்குண்ணி, கருமேகம்,

---

செம்மேகம், அரையாப்பு, கண்டமாலை, பவுத்திரம், முதலிய மேகநீர் சம்பந்தமான அநேக நோய்கள் தீரும்.

| | | | |
|---|---|---|---|
| 10-நாள் அல்லது 20-வேளை லேகியம் | 4 | 0 | 0 |
| 20-நாள் அல்லது 40-வேளை லேகியம் | 7 | 8 | 0 |
| 40-நாள் அல்லது 80-வேளை லேகியம் | 14 | 0 | 0 |

இதில் சித்த மூலிகைகளும் தாம்பிரபஸ்பமும் சேர்த்து முடிக்கப்பெற்ற சிறந்த ஔஷதம்.

## கௌரி நரைமயிர் கருக்குந் தைலம்

இத்தைலத்தை நோட்டீஸில் கண்டவாறு உபயோகிக்க பித்தநரை, பாலநரையும், வயோதிகர்கட்கு ஏற்பட்ட நரையும நீங்கும். ஆயின் வாரம் ஒருமுறை உபயோகிக்க வேண்டும் தைலத்தினால் கருத்தமயிர் வெளுக்கமாட்டாது. தற்காலம் பலர் நரைமயிர் கருக்குந் தைலம் என்று கப்புத்தைலம் விற்கிறார்கள். அதனைப் பூசியவுடன் கருக்கும் சிலருக்கு செம்பட்டைநிறமாகும். ஜலம் பட்டால் வெளுத்து விடுவதுண்டு. நமது தைலம் அவ்விதம் அல்ல அனுபவத்தில் அறியலாம். எமக்கு கிடைத்துள்ள நற்சாக்ஷிப் பத்திரங்களும் மெடல்களுமே எமது ஔஷதங்களின் உயர்வைக் காண்பிக்கும். புட்டி 1-க்கு ரூபா 1 8 0.

# நற்சாட்சிப் பத்திரங்கள்

---

எமது வைத்தியசாலையில் ஔஷதங்கள் புசித்து குண மடைந்து அதன் பயனாக எமக்கு அளித்த நற்சாட்சிப் பத் திரங்கள் அனேக மிருக்கின்றன. அவைகளை இச் சிறிய கேட்லாக்கில் வெளியிடின் இடம் போதாதெனச் சில வற்றைமட்டும் குறிப்பிடுகின்றேன்.

## Ex. Acting Chief Justice of the High Court, Madras

சென்னை நீதிஸ்தானத்தில் நீதிபதியாயிருந்த பாரத பூஷ ணம் டாக்டர் S. சுப்ரமண்ய ஐயர் அவர்கள் எழுதுகிறார் —

கிண்டி ஹவுஸ், 3-11-21.

ஆயுர்வேத வைத்தியர் வி. ஆர். சுந்தரம் சுதேச முறை யை யொட்டி நல்ல சமயத்தில் பிரசுரித்திருக்கும் 'அகஸ் தியர் ரணவைத்தியம்' என்னும் தமிழ் நூலின் பெருமையை அதிகாரிகள் நன்குணர்ந்து கவனித்து வருகிறார்கள். சட்ட சபையின் பிரரேபவணைப்படி ஏற்படுத்தப்பட்டிருக்கும் கமிட் டியார் இந்நூலாசிரியரின் சாட்சியத்தை ஏற்றுக்கோள்வார்கள் என்று நம்புகிறேன். எனக்குத் தோன்றியதில் இவ்வாசிரி யர்க்கு, தமிழ் வைத்திய முறையில் ஆன்றோர் காட்டியுள்ள வழிகளிலே பழக்கம் மிகுதியாயிருப்பதுந் தவிர இவர் அம் முறையையே சென்ற சில வருஷகாலமாக அநுஷ்டித்து வரு கிறார். ஆகையினால் இவருடைய சாக்ஷியம் மிகுதியும் உபகார

---

15. கோபந் தாபம் யாவுந் தள்ளு.

மாயிருக்கக் கூடுமென்று நினைக்கின்றேன். இவர்க்குக் கிடைத்துள்ள நற்சாட்சிப் பத்திரங்களினால் இவருடைய ஔஷதங்களெல்லாம் தக்க பயனைக் கொடுத்திருக்கவேண்டுமென்று தெரிகிறது. இந்த ஔஷதங்கள் இன்னும் மிகுதியாக ஜனங்களுக்குள் பரவவேண்டிய தவசியம்.

---

## கௌரி ஆயுர்வேத வைத்ய மந்திரம்.

நெ. 363, பைகிராப்ட்ஸ் ரோடு,

இராயப்பேட்டை, சென்னை.

தென்னாட்டில் நிலவும் தமிழ்ப் பத்திரிகைகளில் சிறந்த தேசாபிமானத்தைத் தமிழுலகத்தாருக்குப் புகட்டும் உயர்ந்த

"தேசபக்தன்"

என்ற பத்திரிகை சென்ற 1920-ம் வருஷம் ஜூன் மாதம் 5-ந் தேதி சனியன்று எழுதியுள்ள உப தலையங்கத்தின் விஷயத்தை நேயர்கள் அவசியம் கவனிக்கவேண்டுமாதலின் அதைக் கீழே வரைந்துள்ளேன் :—

### நாட்டு வைத்திய முறை.

மேனாட்டு நாகரிகம் இந்நாட்டிற் பரவப் பரவ, இந்நாட்டினர் தங்கள் பண்டைப் புகழையும் பெருமையையும் மறந்து மேனாட்டு வழக்க ஒழுக்க ஆசாரங்களையே பெரிதாகக் கருதி வருகின்றனர். இந்நாடு, வைத்தியத்தில் பண்டைக்காலத்தில் அரிய முறைகளைக் கையாண்டு வந்திருக்கிறது. அம்முறைகள் இன்றளவும் இறந்து படாமலிருந்து வருகின்றன: ஆயினும் நவ

16. கொல்லுகிறதுஞ் சோறு பிழைப்பிக்கிறதுஞ் சோறு.

நாகரிகப் போக்குள்ளவர்கள் நம் நாட்டு வைத்திய முறையி லிருந்த நம்பிக்கையை விட்டொழித்து, மேனுட்டு வைத்திய முறையிலேயே பற்றுள்ளவர்களா யிருத்தல் பெரிதும் வருந்தத் தக்க தோன்றும். இரண சிகிச்சையில் மேனுட்டு வைத்திய முறையே சிறந்ததெனச் சிலர் கருதுகின்றனர். இந்நாட்டு வைத்திய முறையில் இரணசிகிச்சை ஏற்றம் பெற்றிருக்கவில்லை யென்பதை நாம் அங்கீகரிக்கமாட்டோம். எப்படிப்பட்ட இர ணத்தையும் பச்சிலை மூலிகை கொண்டு எளிதில் ஆற்றவல் லோர் சிலர் இப்பொழுதுமிருந்து வருவதை நாம் நன்குணர்ந்திருக் கிறேம். அறுபட்ட நரம்புகளையும் ஒடிந்து போன எலும்பு களையும் ஒன்று சேர்க்கும் சக்தி மூலிகைகளுக்கு உண்டு.

சட்டசபை அங்கத்தினர் சிலர், நாட்டு வைத்திய முறையை ஆதரித்துச் சட்டசபையிற் பேசியிருத்தல் ஈண்டுக் குறிப்பிடத் தக்கது. நாமே நம்முடைய பண்டைப்புகழை அறிந்துகொள்ளா விடினும், நம் நாட்டின் சரித்திரத்தை எழுதும் மேனுட்டு ஆசிரி யர்கள் நமக்கு அதனை அறிவிக்கிறுர்கள். மற்ற நாடுகளெல் லாம் அந்த காரத்தில் மூழ்கி யிருந்தபொழுது, இந்தியா நாகரிக ஒளி வீசிக்கொண்டிருந்த தென்பதைச் சரித்திரம் பயின்றேர் நன்கறிவர். சமீபகாலத்தில் நாகரிகத்தைக் கைக்கொண்டவை களான மேனுடுகள் வைத்தியத் துறையில் சிறந்து விளங்கும் போது, இந்தியா மேனுட்டு வைத்திய முறையைக் காட்டிலுஞ் சிறந்த வைத்திய முறையை யன்றே கையாண்டு வந்திருக்க வேண்டும்? என்று சிலர் தங்களைத் தாங்களே கேட்டுக்கொள் கின்றனர். இவ்வரிய வைத்திய முறை இதுகாலை இருளில் மறைந்திருப்பதற்குப் காரணம் யாது? இம்முறையில் யாதொரு குறைபாடுமில்லை யென்பது அனுபவமுள்ளவர்களுக்கு நன்கு விளங்கும். சில போலி வைத்தியர்களின் படாடோபத்தைக்

17. காலை துயில்வாரும் மாலை விழித்திருப்பாரும் பதர்.

கண்டு அஞ்சி, உண்மையான வைத்தியர்கள் வெளிக் கிளம்பாமல் பதுங்கி யிருக்கிறார்கள்.

போலிகள் மிகுந்துள்ள இக்காலத்திலும், வைத்திய நூலில் முறையாகப் பயிற்சி பெற்றுள்ள சிலர் காணப்படாமலில்லை. புதுப்பாக்கத்திலுள்ள ஸ்ரீ கௌரி ஆயுர்வேத வைத்திய மந்திரத்தின் சொந்தக்காரரான திருவாளர் டாக்டர் வி. ஆர். சுந்தரம் அவர்களும் இவ்வகுப்பைச் சேர்ந்தவ ரென்பதையறிய நாம் பெரு மகிழ்ச்சி யடைகின்றோம். இப்பெரியார் முறையாக வைத்தியங் கற்கும் பொருட்டுப் பல்லாண்டுகள் செலவிட்டிருக்கின்றனர். வைத்திய நூலைப் படிப்பதனாலேயே ஒருவர் கை தேர்ந்த வைத்தியராக வருதல் முடியாது. திறமை ஏற்பட வேண்டுமாயின், அனுபவமும் அவசியமாயிருக்கின்றது. திருவாளர் டாக்டர் சுந்தரம் ஆயுர்வேத வைத்திய முறையைக்கற்று வந்தபோது பெரியா ரொருவரிட மமர்ந்து, சிகிச்சை செய்யவும் பயிற்சி பெற்று வந்தனர். இவர் வயதிற் சிறியவராகக் காணப் படினும், அனுபவத்தில் மிகப் பெரியவரா யிருக்கின்றனர். போலி வைத்தியர்களைப் போல் படாடோபமின்றி, அமைதியுடன் பிணியாளரை யேற்றுச் சிகிச்சை செய்து வருவதே இவருடைய அரிய குணங்களை நன்கு விளக்குகின்றது. இவரது தேர்ச்சியில் எமக்கு மிக்க அனுபவமுண்டு. மேனாட்டு வைத்திய முறையிற் பயிற்சி பெற்றுப் பட்டம் தரித்துள்ள வைத்திய நிபுணர்களால் கைவிடப் பெற்ற பிணியாளர் சிலர், திருவாளர் டாக்டர் சுந்தரம் அவர்களின் சிகிச்சையால் சொஸ்த மடைந்திருக்கின்றனர். வைத்தியஞ் செய்வோருள் பலரைப் போல, இவர் பொருளீட்டலையே முக்கிய நோக்கமாகக் கொண்டிராதது பெரிதும் பாராட்டத்தக்கது. ஆயுர்வேத முறையில் தமக்கு இயற்கையாக ஏற்பட்டுள்ளபற்றே அவரை வைத்தியஞ் செய்யத்

---

18. *கறந்தபாலைக்காய்ச்சாமல் குடித்தால் காசவியாதி தானே எடுபடும்.*

தூண்டி வருகின்றது. சுவாசகாசம், கால் வீக்கம், விஷஜுரம் முதலிய கொடிய வியாதிகளை மேனாட்டு வைத்தியர்களும் வியப்புறும் வண்ணம் இவர் எளிதிற் குணப்படுத்துகின்றனர். இப்பெரியார் தம் ஆயுர்வேத மந்திரத்தில் எளியவர்களுக்கு இலவசமாக வைத்தியஞ் செய்து வருகின்றனர். ஆயுர்வேத யூனனி வைத்திய முறைகள் தம் பண்டைப் பெருமையை இழந்திருக்குமிந்நாளில் திருவாளர் டாக்டர் வி. ஆர். சுந்தரம் அவர்கள் போன்ற உண்மையான வைத்தியர்களை ஆதரிக்க வேண்டுவது நமது கடனாகலின், நேயர்களும் அவருக்கு ஆதரவளிப்பார்களென நம்புகிறோம். இவர் முறையாக வைத்தியஞ் செய்தல் தம் தாய் நாட்டிற்குப் பெருத்ததோர் ஊழியஞ் செய்வதாகுமென நாம் கருதுகிறோம். ஆயுர்வேத வைத்திய முறையின் பண்டைப் பெருமையை நிலைநாட்டுமாறு உழைக்க இவருக்கு நீண்ட ஆயுளையும் தளரா ஊக்கத்தையு மளிக்குமாறு இறைவனை இறைஞ்சு கின்றோம்.

---

*தென்னாட்டில் காரைக்குடியில் வெளிவரும் தனவைசிய ஊழியன் பத்திரிகை ரௌத்திரி ஹு உசவ கக-ம் பக்கம் மதிப்புரை.*

நந்தம் நாட்டு வைத்தியம் பண்டைக்காலத்தில் மிகச் சிறப்புற்று விளங்கியது. பலர் மேல்நாட்டு நாகரீக மயக்கத்திலாழ்ந்ததன் காரணமாக நம் ஆயுர்வேத வைத்திய ஒளி சிறிது மங்கியதாயினும், இன்றளவும் நின்று புராதனப் பெருமையையடைவதற்கான அறிகுறிகள் பலகாணப்படுகின்றன. இக்காலத்திலும் நமது நாட்டில் வைத்தியம் இன்னதென்றறியாத சில பேர்வழிகள் போந்து பலரைத் துன்பத்துக்குள்ளாக்குகிறதை நாம் நேரில் காண்கிறோம். படாடோபத்தால் ஏமாற்

---

19. *கந்தையானாலும் கசக்கியுடு; கூழானாலும் குளித்துக்குடி.*

றிச் சமயம்பார்த்துப் பணம்பறிப்பதையே தொழிலாகக் கொண்ட போலிகள் மிகுந்திருக்கிறார்களென்றால், மிகையாகாது. நிற்க, ஆயுர்வேதவைத்ய நூலின் தேர்ச்சி பெற்று, அநுபவத்திலும் சிறந்து எல்லா நறுங்குணங்களும் வாய்ந்து பாரத தேசத்திற்குத் தொண்டு செய்வதே தம்முடைய நோக்கமாகக் கொண்ட திருவாளர் டாக்டர். வி. ஆர். சுந்தரம் அவர்கள் எந்த வியாதிக்கும் தகுந்த மருந்தைக் குறைந்த கிரயத்திற்குக் கொடுத்து உதவுகிறார்கள். மேல்நாட்டுப் பட்டம் தாங்கிய வைத்தியர்களால் கைவிடப்பெற்ற பிணியாளர் பலர் திருவாளர் சுந்தரம் அவர்களால் சௌக்கியமடைந்திருக்கிறார்கள். ஏழைகளுக்கு இலவசமாக வைத்தியம் செய்கிறார்கள். இரத்த விருத்தி, மலச்சிக்கல், விஷஜுரம், பல்நோய், தலைவலி, கண்நோய், கபாலநோய், வயிற்றுவளைச்சல், இரணம், வெட்டுக்காயம், விஷக்கடி, முறைக்காய்ச்சல், காங்கை, வலிப்பு, வயிற்றுப் பொருமல், இருமல், கால்ரா, மாந்தம், மஞ்சட் காமாலை, முதலிய வியாதிகட்கு நாம் அநுபவத்தில் அறிந்த வரையில் திருவாளர் சுந்தரம் அவர்களுடைய மருந்துகள் மிகவும் குணமாகவே இருக்கின்றன. மற்றும் எவ்வித வியாதிகட்கும் குணம் குறி முதலிய சரீரநிலைமைகளை வியக்தமாக எழுதினால் தகுதியான நல்ல மருந்துகள் அனுப்புகிறார்கள்.

நமது சமூகத்தார்கள் வைத்ய முறையும் அநுபவ முதிர்ச்சியும் இல்லாதவர்களிடம் சென்று பணத்தையும் ஏராளமாகக் கொடுத்து கஷ்டத்தையும் அநுபவியாதிருக்க வேண்டுமென்ற பூரண எண்ணங் கொண்டே இதை எழுத முற்படலானேன். ஔடதம் வேண்டுவோர்—டாக்டர் வி. ஆர். சுந்தரம் அவர்கள். ௯௬௯, பைக்ராப்டஸ் ரோட், இராயப்பேட்டை சென்னை, என்ற விலாசத்திற்கு எழுதிப் பெற்றுக்கொள்க. சுபம்.

*பி. ச. சுப்பிரமணியன்,*

*அமராவதிப் புதூர்.*

## "சுதேசமித்திரன்."

15—4—20.

சுகானந்த பரிமளத் தைலம்-சென்னை, புதுப்பாக்கம் பைக்ராப்ட்ஸ்ரோடு 363-வது நெம்பர்விலாசமுள்ள டாக்டர் வே.ரா. சுந்தரம் என்கிற ஆயுர்வேத வைத்தியரிடமிருந்து சுகானந்த பரிமள தைலமும், ஸ்ரீ கௌரி கஸ்தூரி மனோகர மாத்திரைகளும், பற்பொடியும் வரப்பெற்றோம். மேற்படி தைலம் மிக்க வாசனையும், குளிர்ச்சியும், ஆரோக்யமும் தரக்கூடியதாயிருக்கிறது. கண்ணெரிச்சல், தலை நோய், மூளைக் கொதிப்பு முதலியவைகளைப் போக்குவதற்காக இத்தைலம் தயார் செய்யப்பட்டிருக்கிறது. கஸ்தூரி மாத்திரைகள் இரு பாலரும் தாம்பூலத்துடன் உபயோகிப்பதற்கும் குழந்தைகளின் ஜுரம், மாந்தம் முதலியவைகளைப் போக்குவதற்கும் செய்யப்பட்டிருக்கின்றன. பற்பொடி தந்த சுத்தி செய்ய மிக்க ரம்மியமா யிருக்கிறது.

---

## லோகோபகாரி

டாக்டர் வி. ஆர். சுந்தரம் அவர்களால் செய்யப்பட்ட மலபந்த நிவாரணி என்னும் லேகியத்தை நாம் உபயோகித்துப் பார்த்தோம். இந்த லேகியத்தினை இரவில் துயில்கொள்வதற்கு முன்னர் உட்கொண்டோம். அதனால் வயிற்றுநோயும் ஆசனக் கடுப்புமின்றி சுகமாக 2, முறை மலப்பிரவிர்த்தியாயது; பசி தீபனமும் உஷ்ணசாந்தியு முண்டாயின. மலபந்தமே நோய் பலவற்றிற்குங் காரணமா யிருக்கின்றமையின், நோயின்றிச் சுகவாழ்வெய்த விருப்பமுள்ளவ ரோவ்வொருவரும் இந்த லேகியத்தினை வாங்கிச் சாப்பிடுவது அவசியமாம்.

---

20. *சிறு குழந்தை யில்லாத வீடும் வீடல்ல; சீரகம் இட்டு ஆக்காத கறியும் கறியல்ல.*

## தேசபக்தன்

### I

20—9—19.

சுகாநந்த பரிமளத் தைலம்:—எமது பார்வைக்குப் பல மருந்துகளும் தைலங்களும் அனுப்பப்படுகின்றன. அவை களுள் குணமுடைய சிலவற்றைப்பற்றியே யாம் மதிப்புரை எழுது வது வழக்கம். மேற்குறிப்பிட்டுள்ள தைலத்தை எம்மவருள் ஒருவர் ஏறக்குறைய மூன்று மாத காலம் உபயோகித்து வந்தார். அத் தைலத்தைப்பற்றி விளம்பரத்தில் சூசிப்பித்துள்ள பல குணங்கள் இருப்பதைக்கண்டு அவர் மகிழ்வுற்றார். மூளைக் கணுள்ள வெம்மை, உஷ்ணத்தால் தோன்றும் தலையிடி இவை களை அத்தைலம் போக்கிச் சுகமளிக்கின்றது. வேண்டுவோர் வி. ஆர். சுந்தரம் அவர்களின் ஸ்ரீ கௌரி ஆயுர்வேதவைத்திய மந்திரத்தில் பெற்றுக்கொள்ளலாம். விலை 1—4—0.

---

### II

சுந்தரம் பற்பொடி:—இப் பற்பொடி டாக்டர் V. R. சுந்தரம் அவர்களால் தயாரிக்கப் பட்டது. இதனால் பல்துலக்கி வருபவர்கள் வாயிலுண்டாகும் பல நோய்களின்றும் நீங்கப் பெறுவார்க ளென்பதில் ஐயமில்லை. இப்பொடி சிறந்த வஸ் துக்களால் ஆக்கப்பட்டதாகத் தெரிகிறது. வாய்க்கு இனிமை தரக்கூடியதாக இருப்பது மன்றி, விரைவில் வாயிலுள்ள நோய் களைக் குணப்படுத்தக்கூடியதாகவும் இருக்கிறது. டப்பி 1-க்கு அணு மூன்றே. டாக்டர் V. R. சுந்தரம் அவர்கள் விளம் பரஞ்செய்யும் ஸ்ரீ கௌரி சித்தௌஷதம் என்னும் மருந்துகள் அனுபவத்தில் மிக்க பலன் தரக்கூடியதாகவே இருக்கின்றன.

---

21. அளவுக்கு மிஞ்சினால் அமிர்தமும் விஷம்.

இவர் தக்க பெரியாரிடமிருந்து பல அரிய மருந்துகளின் முறைகளைத் தெரிந்து கொண்டிருப்பவராகக் காணப்படுகிருர்.

---

III

கௌரி மலபந்த நிவாரணி:—டாக்டர் வி. ஆர். சுந்தரம் அவர்களின் கௌரி மலபந்த நிவாரணி என்னும் லேகியத்தை உபயோகித்துப் பார்த்தோம். இது மலபந்தத்தை நீக்கி நல்ல பசியை யுண்டாக்கி வருகின்றது. ஜீரணக் கருவிகள் கெடாதபடி காந்துச் சரீரத்திற்குச் சௌக்கியத்தை யளிக்க இது ஒரு சிறந்த லேகியமென்று கூறலாம். பேதியாகாமலும், உஷ்ணம் அதிகரிக்காமலும் மலச் சிக்கலை நீக்கி வருகின்றமையால், மலச்சிக்கல் நோயுடையோருக்கு இது பெரிதும் பயன்படும் என்பதில் ஐயமில்லை. இது போது ஜனங்களின் ஆதரவைப் பெறும் என்று நாம் நிச்சயமாய் நம்புகின்ருேம்.

---

முன் "தேசபக்த"னுக்கும் இப்போது "நவசக்தி"க்குப் பத்திராதிபரும் சிறந்த தேசாபிமானியுமான

## ஸ்ரீமான் திரு. வி. கலியாணசுந்தர முதலியார் அவர்கள்

22—6—20.

சென்னை புதுபாக்கம் ஸ்ரீ கௌரி ஆயுர்வேத வைத்திய மந்திரத்தில் வதியும் ஸ்ரீமான் வி. ஆர். சுந்தரம் அவர்களை ஈராண்டாக நான் அறிவேன். அன்னர் தொழுநோய் (குஷ்டம்) நீரிழிவு, இருமல், காசம் முதலிய கொடிய நோய்களைத் தீர்த்து வருவதைக் கண்டுங் கேட்டு மிருக்கின்றேன், கட்டி முதலிய புண் வகைகளை ஒழிக்கும் மூலிகை மருந்துகள் ஸ்ரீமான்

---

22. அன்ன மொடுங்கிஞல் அஞ்சு மொடுங்கும்.

சுந்தரம் அவர்களிடத்திலுண்டு. இவரது திறமைக் கண்டே நான் இவரை எனது குடும்ப வைத்தியராக ஏற்றுக்கொண்டேன். இப்பொழுது இவர் பால் மூளைக் கொதிப்புக்கு மருந்துண்டு வருகிறேன். ஆயுர்வேத வைத்ய முறை அழிவுற்றுள்ள இந்நாளில் இத்தகைய நாட்டு வைத்தியர்களையும் நாட்டு மருந்துகளையும் ஆதரிக்க வேண்டுவது எனது நாட்டவர் கடமை.

---

*பிரம்மஸ்ரீ திரிசிரபுரம்*
*சிவானந்த யோகிஸ்வரர்*
15—2—20

டாக்டர் வி. ஆர். சுந்தரம் அவர்களை நான் சில வருஷங்களாக அறிவேன். அவர்கள் வைத்தியம் பழகி வருகிறார்கள் என்பதும் தெரியும். அவர்கள் சென்ற மாதம் என் வீட்டில் கொடிய சுரத்தினாலும் மாந்தத்தினாலும் அவஸ்தைப்பட்ட குழந்தைகட்கெல்லாம் தக்க மருந்துகளை, உடற்கூற்றறிந்து உபயோகித்துக் குணப்படுத்தினார்கள். அவர்கட்கு கைபிடித்துப் பார்த்து வியாதியின் குணமறிந்து கொள்ளும் சக்தி யுண்டென்பது கண்டேன். அவர்கள் கையில் தக்க ஔஷதங்களைத் தயார் செய்து வைத்துக்கொண்டு வைத்தியம் செய்வது மிகவும் திருப்திகரமாயிருக்கிறது.

---

***கனம் K. கணபதி அய்யர்,***
*மதராஸ் ஸிடி லாண்ட் ரிகார்டு டிப்டி கலெக்டர்.*
26-7-21.

டாக்டர். வி. ஆர், சுந்தரம் கொடுத்துதவிய சில ஆயுர்வேத ஔஷதங்களை எனக்கும் என் நெருங்கியபந்து ஒருவருக்கும் உபயோகித்துப் பார்த்தேன். அவைகள் அதிசக்தியுடையன

---

23. *ஆலும் வேலும் பல்லுக் குறுதி.*

வாயும் சீக்கிரத்தில் நிச்சயமான பலன் கொடுக்கக் கூடியவை யாயு மிருக்கக் கண்டேன். அவர் கைக்கொண்ட சிற்சில சித் தௌஷதங்களால் அவர் முறைகள் ஆச்சரியப்படும்படி விரை வில் பலன் தருகின்றன. உலகத்திற்கு அவர் இப்படி உதவி செய்துகொண்டுவர நீடூழிகாலம் வாழ்வையும் உன்னதஸ்திதி யையும் அடையவேண்டும் என்றும் என் நேயரும் நானும் பிரார்த்திக்கிறோம்.

---

மகா-ா-ா-ஸ்ரீ M. V. N. சுப்பராவ் காரு, M. A.
பச்சயப்பன் காலேஜ் இங்கிலீஷ் அஸிஸ்டெண்டு,
புரொபஸர்.
27-11-21.

சில மாதங்களுக்குமுன் என் மனைவி விடாத மலை ஜுரத் தால் (மலேரியா எனும் குளிர் ஜுரம்) அவஸ்தைப்பட்டுக் கொண்டிருந்த தருவாயில் டாக்டர் சுந்தரம் தேர்ந்த வைத்தியர் என்று என் சிநேகிதர் ஒருவர் எனக்குச் சொன்னார். அவர் பார்க்க ஆரம்பித்த மூன்று தினத்தில் யாவரும் ஆச்சரியப்படும் படி சொஸ்தம் செய்துவிட்டார். அது முதல் அவர் தயார் செய்திருக்கிற அநேக ஔஷதங்களை உபயோகித்ததில் எனக்கு அதிக திருப்திகரமா யிருக்கிறது. பொது ஜனங்களுக்கு இவ ருடைய பெருமையை மனப்பூர்வமாகத் தெரிவிக்க எனக்குக் காரணம் ஏற்பட்டது.

---

C. J. சுப்பராஜு காரு, பி. ஏ.
(Artist) நெ. 13, பைகிராப்ட்ஸ் ரோட்,
இராயப்பேட்டை, சென்னை.
15—7—19.

கடந்த ஒரு வருடகாலமாய் என் குடும்ப வைத்தியராய் இருக்கும் டாக்டர் சுந்தரம், என்னுடைய குழந்தைகளுக்கு அவ்வப்போது ஏற்பட்ட பிணிகளை யெல்லாம் கவலையுட

னும் சிரத்தையுடனும் சொஸ்தப்படுத்தியிருக்கிருர். குஷ்ட ரோகம், க்ஷயரோகம், பார்ச வாய்வு முதலான கடும் ரோகங் களையும் குணப்படுத்தும் ஆற்றல் அவர் பெற்றிருக்கிருரென்பது எனது துணிபு. முனிவர்களால் தயாரிக்கப்பட்ட நல்ல மருந்து வகைகளையும் அவர் வைத்திருப்பதாகச் சொல்லப்படுகிறது. பிற வைத்தியர்களால் கைவிடப்பட்டவர்களின் நோய்களையும் ஆச்சரியப்படும்படியாய் தக்க மருந்துகளைக் கொண்டு குணப் படுத்தியிருக்கிருர். வாந்திபேதி, இன்புளுயன்சா ஆகிய இவைகளை இவர் குணப்படுத்துவதில் ஒரு வேளையும் தவறிய தில்லை. இவர் உதவியை மற்றவர்களும் நாடி, நன்மை எய்து வார்களென்ற நம்பிக்கையுடன் நான் இதைக்கூறுகிறேன்.

---

இராயப்பேட்டை மதராஸ் 26-9-19.

*மகா-ா-ா-ஸ்ரீ திருமலாச்சாரியார் அவர்கள்* B.A.,B.L.,
*ஹைகோர்ட் வக்கீல்.*

நான் சென்ற 10 வருஷங்களுக்கு மேலாய் தலைவலியினு லும் ஒற்றைத் தலைவலியினுலும் அடிக்கடி அவஸ்தைப்பட்டு வந்தேன். தங்களுடைய (சுகானந்தனி உயர்ந்த தலைமயிர்த்தை லம்) உபயோகப்படுத்தி வந்ததில் ஒரு மாதத்தில் முழுசுகத்தை யடைந்தேன். மூளை வேலை ஜாஸ்தியுள்ளவர்களுக்குத் தங் கள் கௌரி சுகாநந்தனி நயமாயிருப்பதோடு நிச்சயபலத்தைத் தருகிறது.

உங்களுடைய பல்பொடி மற்ருெரு விசேஷமான குண முடையது. பல்வலி பொறுக்க முடியாமல் அநேகர் பற்களை எடுத்துவிடச் செய்வதை நாம் பார்க்கிரும். நீங்கள் செய்திருக் கும் பற்பொடி வலியைக் கண்டிப்பதோடு பல் வேரைக் கெட்டிப் படுத்திவாய் நாற்றத்தையும் போக்கடிக்கிறது. இந்த உஷ்ணப்பிர தேசத்தில் இவ் வுபத்திரவம் சாதாரணமாய்க் காணப்படுகிறமை யால் என் அனுபோகத்தைப் பிறரறியும்படி பிரசுரிக்கிறேன்.

*ச. நடேச முதலியார்,*

ஜவுளி வியாபாரம், இராயப்பேட்டை, சென்னை.

டாக்டர். வி.ஆர். சுந்தரம் அவர்களை இரண்டு மூன்று வருட காலமாய் அறிவேன். நான் சுவாசகாச நோயால் (ஆஸ்தமா) ஆறேழு வருட காலமாய்க் கஷ்டப்பட்டு பிரபல ஆங்கிலேய வைத்தியர்களிடமும், ஆயுர்வேத யூனனி வைத்தியர்களிடமும் பலநாள் ஔஷதம் சாப்பிட்டும் கிஞ்சிற்றும் பயனில்லை. முன் தேசபக்தன் பத்திராதிபரும், இப்போது நவசக்தியின் பத்திராதி பராயுமுள்ள எனது நண்பர் ஸ்ரீமான் திரு. வி. கல்யாணசுந்தர முதலியார் ஷ வி. ஆர். சுந்தரம் அவர்களிடம் ஔஷதம் சாப் பிடும்படி பலமுறை வற்புறுத்திக் கொண்டிருந்தார். கடைசியாக இதையும் சாப்பிட்டுப் பார்ப்போம் என்று ஷ டாக்டரிடம் உள்ள கௌரி காசாரிஷ்டம் என்னும் ஔஷதத்தை உபயோ கித்து வந்தேன். நெடுநாளாய் என்னைத் துன்புறுத்தி வந்த சுவாசகாஸ நோய் முற்றிலும் நீங்கிவிட்டது. அச் சந்தோஷ மேலீட்டால் 8-8-1921-ல் இராயப்பேட்டை குகானந்தசபையில் ஸ்ரீமான் திரு. வி. கல்யாணசுந்தர முதலியார் அவைத் தலைமை யின் கீழ் ஷ டாக்டருக்குப் பொற்பதக்கம் ஒன்று பரிசளித்தேன்.

சுவாசகாச நோயால் கஷ்டப்படும் நண்பர் பலருக்கு ஷ டாக்டரிடம் உள்ள ஔஷதம் மிகுந்த நன்மையைத் தரும் என் பது எனது அநுபவம்.

---

இராயப்பேட்டை, 18-8-21.

டாக்டர் வி. ஆர். சுந்தரம் அவர்களுக்கு,

ஐயா,

எனக்கு இரண்டுவருஷ காலமாய் அவஸ்தை கொடுத்த காசத்தை (ஆஸ்த்மா) தீர்த்துவைத்த தங்களுடைய முறையின் குணங்களைப்பற்றி எழுத அதி ஆநந்தமடைகிறேன்.

---

24. *ஆறின புண்ணிலும் அசடு நிற்கும்.*

அநேக பெரிய டாக்டர்கள் பார்த்தும் எனக்குக் கொஞ்சங் கூட சௌக்ய மேற்படவில்லை. தாங்கள் உபயோகித்த கௌரி காசாரிஷ்டமருந்தே அதிகப்பலனை விளைவித்தது. தீராததென்று சொல்லப்படுகிற இக்கொடிய நோய்க்குத் தாங்கள் தயாரித்திருக்கும் ஔஷதத்தைவிட சிலாக்கியமானது வேறொன்றுமில்லை. தங்கள் மருந்து வியாதியை அற ஒழித்ததோடு எனக்கு இன்னும் அநேக நன்மைகளையும் விளைவித்தது. நீங்களே என்னைக் காக்கவந்த என் தெய்வம்.

(Sd.) *வி. கிருஷ்ணசாமி பிள்ளை,*
*ஹெட் சிக்னலர், தபாலாபீசு, திருவல்லிக்கேணி.*

---

*புதூர்,* 15-12-21.
*சா. பொன்னுசாமி நாய்க்கர்,*
*காண்டில் ஒர்க்ஷாப், சென்னை.*

எனக்கு பீஜவீக்கம் ஏற்பட்டு இராயப்பேட்டை ஆஸ்பத்திரியில் 1911ஞு ஆப்பரேஷன் செய்தார்கள். அதுமுதல் 1917 ஞு வரை பாதையில்லை. மறுபடி பீஜவீக்சமும் சுரமும் பாதை ஜாஸ்தி யாகிவிட்டது. அநேக இடங்களில் மருந்து சாப்பிட்டும் பயனில்லை. தங்களிடம் வந்து கௌரி கஜாங்குச செந்தூரமும் எண்ணெயும் சாப்பிட்ட பிறகுதான் சௌக்யம் ஏற்பட்டது. இப்படிபட்ட எண்ணெயும் செந்தூரமும் ஷ நோயுள்ள ஒவ்வொருவரிடமும் இருந்தால் ஷ நோய் நீங்கிவிடுமென நம்புகிறேன்.

---

*கனம் P. சீனிவாசபிள்ளை,*

*எழும்பூர் தென் இந்தியா ஹெல்த் அண்டு வெல்பேர்,*
*அசோசியேஷன்.*

சென்ற ஐந்துவருஷ காலங்களாக நான் கொடிய வயிற்று வலியினால் அவஸ்தைப்பட்டுக் கொண்டிருந்தேன். இந்தக் கடி

தம் எழுதும் ஒரு மாதத்திற்கு முன் இராப்பகல் சதாகால மும் அவஸ்தை ஏற்பட்டது. நான் அநேக டாக்டர்களிடம் மருந்து சாப்பிட்டதில் வியாதி அதிகரித்ததே யொழியக் குறைவு படவில்லை. இப்படி இருக்கையில் ஓரிரவு வலி அதிகமாய்ப் பொறுக்க முடியாமல் தோன்றியது. ம-ா-ா-ஸ்ரீ நடேச முதலி யாரால் டாக்டர் வி. ஆர். சுந்தரம் பெருமையைக் கேள்விப் பட்டு அவரை அண்டினேன். அது காலம் முதல் அவர் எனக்குச் சிற்சில ஔஷதங்கள் கொடுக்கலாயினர். எனக்கு இப்போது முக்கால்வாசி ஸ்வஸ்தம் ஆகிவிட்டது. என் வினை தீர்த்தது முக்கியமாய் ஸ்ரீ கௌரிகுன்ம குடாரம் என்னும் தேவ ஔஷதமே. இன்னும் ஒரு வாரத்தில் என் நோய் அறத் தொலையும் என்று நம்புகிறேன். அவருடைய மருந்து எனக்கு அமிர்தமாய் விளங்கியது. அவர் அநுகூலம் செய்ததற்கு நான் அவரை எவ்வளவு புகழ்ந்து பேசினாலும் போதாது. அவர் இன் னும் மேன்மேலும் கௌரவம், புகழும் வைத்தியத்தில் அடை வாராக.

---

*பிரம்மஸ்ரீ வரகவி திரு. அ. சுப்பிரமணிய*
*பாரதியார், சென்னை.*
15—2—20.

டாக்டர் V. R. சுந்தரம் அவர்கள் எனக்குப் பழக்க முடை யவராய்ச் சுமார் பத்து வருஷங்கட்கு மேலாகின்றன. அவர் கள் வைத்திய விஷயமாய்ப் பல சித்தநூற்களை ஆராய்ந்து வந் ததையும் பல பெரியவர்களைத் தேடிச்சென்று வைத்திய முறை களைக்கற்று வந்ததையும் நான் அறிவேன். அவர்கள் சென்ற ஐந்து வருடங்களுக்கு முன் என் சகோதரன் டி. ஆர். இராஜமய் யருக்கிருந்த குஷ்ட நோயை எல்லோரும் ஆச்சரியப்படும்படி குணப்படுத்தினர்கள். அதுவுமன்றி சென்ற மாதம் என் வீட்

---

25. கடுகு சிறுத்தாலும் காரம் போகாது.

டில் என் குழந்தைகளுக்கு வந்த கொடிய ஜுரத்திற்குத்தக்க ஔஷதங்களைக் கொடுத்து சௌக்கியப்படுத்தினர். இவ்விரண்டுமல்லாமல் இன்னும் என் நண்பரிற் சிலரை இவர் ஆபத்திலிருந்துங் காத்தது ஆச்சரியப்படத் தக்க தேயாம். கபங்களைப் பிரிக்க நல்லமருந்து இவர்கள் கையிருப்பில் வைத்திருக்கின்ருர். இவர்கட்கு ஈச்வரன் நீடித்த ஆயுளைத்தந்து உலகுக்குப் பேருபகாரியாக்குமாறு இறைவன் திருவருளைச் சிந்திக்கின்றேன்.

---

*மகா-ா-ா-ஸ்ரீ கணபதி அய்யர் அவர்கள் பீ.ஏ..*
*சென்னைக் கவர்ன்மெண்டு செக்ரெடெரியேட்*
*சூபரின்டென்டெண்ட்.*

16-8-21.

நான் மகா-ா-ா-ஸ்ரீ சுந்தரம் அவர்களைக் கொஞ்ச காலமாய் அறிவேன். அவருடைய ஔஷதங்களின் குணங்களை நான் சிகிச்சைசெய்துவரும் சில கேசுகளில் பிரயோகிக்க சமயங்கள் ஏற்பட்டன. அவர் தேர்ந்த வயித்தியர் என்று பிரசுரிப்பதில் எனக்கு வெகு சந்தோஷம். அவர் இப்போது அடைந்திருக்கும் பெருமைக்கும் கீர்த்திக்கும் காரணம் அவரிடமுள்ள வியாதியை அறியும் திறமையும் ஔஷதங்கள் செய்யுமுறையும் நோயாளிகளைக் கவனிக்கும் விதம் முதலியவைகளேயாகும். அவர் கீர்த்தி இன்னும் மேன்மேலும் விளங்கி எண்ணிறந்த ஜனங்களின் சரீரகஷ்டங்களை நிவர்த்திப்பார் என்று நம்புகிறேன்.

---

*ஸ்ரீமான் இராஜுபிள்ளை அவர்கள்*
*நெ. 279. பைகிராப்ஸ்ரோடு, சென்னை.*

ஐயா, என் தமக்கையின் 13 வயதுள்ள பெண்ணிற்கு இன்புளுயன்ஸா சென்ற 19-9-19-ல் கண்டபோது, ஆயுர்வேத பண்டிதர்களையும் டாக்டர்களையும் கொண்டு சிகிச்சை செய்து

தீராதெனக் கைசோர விடப்பட்டு கேவல நிலைமையி லிருந்தது. எனது நண்பர் ஒருவர் தங்களது கௌரி இன்புளுயன்ஸா மாத்திரைப் புட்டி ஒன்றையும் குறிப்பையும் கொடுத்து குறிப்பில் கண்டபடி உபயோகிக்கச் சொல்ல, அவ்விதம் உபயோகித்தவளவில் அப்பெண் இரண்டு தினத்தில் பூரண சௌக்கியத்தை அடைந்தது. உமது ஔஷத விசேஷம் அதிசயிக்கத்தக்கதாயிருந்தது. இக்கொடிய நோயினின்றும் காப்பாற்றிய உமது மருந்துக்காக உமக்கு அளவற்ற சந்தோஷத்துடன் அநேக வந்தனம் அளிக்கின்றேன்.

---

26—1—22.

14, பைகிராப்ட்ஸ்ரோட் இராயப்பேட்டை.

மகா-ா-ா-ஸ்ரீ ஏ. தர்மலிங்க முதலியார்,

பென்ஷன் போலீஸ் ஸப் இன்ஸ்பெக்டர்.

என் குமாரிக்குகொடிய ஜுரமும் வயிற்றுக்கடுப்பும்சேர்ந்து அவஸ்தை உண்டுபண்ணிய காலை அவள் ஸ்வஸ்தமடைவது ஸ்ரமஸாத்யமென்று கைவிட்டபோது டாக்டர் வி. ஆர். சுந்தரம் ஔஷதம் பிரயோகிக்க ஆரம்பித்து வியாதிகளைக் கண்டித்தார். பிணியாளர்களைக் கவனிப்பதிலும் சித்தௌஷதங்களைக் கைவசப்படுத்தி யிருப்பதிலும் அவர் தேர்ந்தவர் என்று தெரிய வருகிறது. அவர் நவீநமாதிரியாய் சிகிச்சை செய்கிறதோடு ஏனைய டாக்டர்கள் கைவிட்ட கேஸ்களை வெகு ஸ்ரத்தையுடன் பார்த்து அநுகூலம் செய்விக்கிறார். எனக்குத் தெரிந்தவரையில் அவர் விஷபேதி, விஷஜுரம் இவைகள் இரண்டையும் கண்டனம் செய்வதில் தவறியதில்லை, அவஸ்தைப்படுவோர் அவரை அணுகவேண்டுமாறு கேட்டுக்கொள்ளுகிறேன்.

---

26. தூக்கம் பிடித்துத் தூங்கினால் பாதி வியாதி விட்டதாம்.

மு. இராமனுதம் செட்டியார்.
பஸ்ட் கிராஸ் தெரு, நெ. 60, மலாக்கா,
12-9-1921.

ஐயா, தங்க ளன்பார்ந்த 8-6-1921 கடிதம் கிடைத்தது பானும்ருதமும் வந்து சேர்ந்தது. என் நண்பர்கள் யாவருக்கும் கொடுத்து அவர்களும் அதின் அற்புத குணத்தைத் தெரிந்து அவர்கள் ஒவ்வொருவரும் தனித்தனியே தங்களுக்கு நேரில் கடிதம் எழுதி வருத்தி உபயோகித்து வருகிறார்கள். தனவைசிய ஊழியனில் தாங்கள் எழுதி வரும் வியாசம் உலகத்தவருக்கு மிகுந்த நன்மை பயக்கக்கூடியதே. ஆதலால் அவ் வியாசத்தை விடாது முறையாக எழுதி வருவீர்களென நம்புகின்றேன்.

---

வ. நா. வ. அண்ணாமலை செட்டியார்.
பஸ்ட்கிராஸ் தெரு, 61 மலாக்கா,
1-7-1921.

ஐயா, தங்களால் இனிது செய்யப்பெற்ற கௌரி பானும்ருதத்தை எனது நண்பர் மூலம் உபயோகப்படுத்திப் பெருமகிழ் வெய்தி இது முதல் பானும்ருதத்தையே உபயோகப்படுத்துவதாக நிச்சயித்திருக்கிறேன். இக்கடிதம் கிடைத்ததும் எனது விலாசத்திற்கு மேல் கண்ட டப்பியில் (உச) வி. பி. மூலம் தயவு செய்து அனுப்பி வைக்கும்படியாகக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

---

சாது அச்சுக்கூடம், சென்னை.

# கௌரி

# அயகாந்த பலவிர்த்தி ஔஷதம்

---

## (அயரன் டானிக்)

இது அயகாந்தச் சத்துக்களை திரவரூபமாய் முடிக் கப்பெற்றது. இருதயம், மூளை, குண்டிக்காய், முதலிய உருப்புகளுக்கு பலத்தைக்கொடுக்கும் அரிய ஔஷதங் கள் சேர்த்து தயாரிக்கப் பெற்றுள்ளது. சிறுவர் முதல் பெரியவர் வரை ஆண் பெண் இருபாலரும் உபயோகிக் கக்கூடியது. இது ருசிகரமானது. எவ்வித பத்தியமு மில்லை. வியாதியினால் மெலிந்து இரத்த குறைவு உள் ளவர்கள், காமாலை, சோகை முதலிய நோய்களினால் ரத்தங்குறைந்து திரேகம் வெளுப்புடையவர்கள், பித்த சூட்டினால் கைகால் எரிச்சல் உடையவர்கள், பித்த உவரி யினால் நாக்கு ருசியில்லாமல் அரோசிகமுடையவர்கள், ஸ்திரீகளுக்கு சூதக பந்தத்தால் உண்டாகும் ரோகங்கள் இம்மாதிரியான வியாதிகளின் குரூரத்தை போக்கி யாவரும் அதிசயிக்கத்தக்கவாறு ரத்த - விர்த்தியைக் கொடுத்து அஜீர்ணத்தைப்போக்கி பசியுண்டாக்கி திட பலத்தை கொடுக்கும். இன்னும் அநேக வியாதிகள் தீரும். மருந்துடன் அனுப்பும் உபயோக விதியில் பூரண விபரங் காண்க. புட்டி 1-க்கு விலை ரூபா 2:

ஸ்ரீ கௌரி ஆயுர்வேத வைத்ய மந்திரம்,

பைகிராப்ட்ஸ ரோட், இராயப்பேட்டை, சென்னை.